For private circulation only

Book Post

www.tchsportal.co.in

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

ஜனவரி 2021 • இதழ் 8



ஆண்டவரின் செயல்கள் நீதியானவைகள்; ஒடுக்கப்பட்டோர்
அனைவருக்கும் அவர் உரிமைகளை வழங்குகின்றார்.

திருப்பாடல்கள்.103.6

# சட்டத்தை அறிந்து சுதந்திரமாக சத்தியத்தை அறிவியுங்கள்



**இலவச சட்ட ஆலோசனைக்கு**

**Dr. ID . KING PAUL . MD**

SOLAMIO ENTERPRISES
# 7, Ideal City Periyapalyam,
Uthukottai, Tiruvallur-601102
Tamilnadu
Ph +91 97510 20106,
97900 00275, 97905 91747
Email: solamio777@gmail.com

**SOLAMIO ENTERPRISES**

## ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பான கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் ஆய்விதழின் வாசகர்கள், எழுத்தாளர்கள் மற்றும் விளம்பரதாரர்கள் யாவருக்கும் இனிய புத்தாண்டு நல்வாழ்த்துக்கள். ஒவ்வொரு ஆரம்பமும் புதியதொரு வரலாற்றின் தொடக்கம் ஆகும். கடந்த ஆண்டில் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் வழியாக வெளிவந்து கொண்டிருக்கும் வரலாற்று சுவடுகள் மாத ஆய்விதழ் வரலாற்றில் ஒரு அற்புதமான தொடக்கம். சாதாரணமாக தொடங்கப்பட்ட காரியங்களே வரலாற்றின் பங்கங்களில் மிகப் பெரிய தாக்கங்களை ஏற்படுத்தி இருக்கிறது. நம் மிஷனரிகள் பல்வேறு எதிர்பார்ப்புகளோடும் நோக்கங்களோடும் சாதாரணமாக தொடங்கிய ஊழியங்களே இன்று நம் வாழ்வை வளமாக்கியுள்ளது. ஒரு புதிய ஆண்டினை தொடங்கி இருக்கிற நாம் பெரிய நோக்கங்களை முன்னிறுத்தி செயல்பட்டால் புதியதொரு வரலாற்றை படைக்க முடியும். நம் வரலாற்று சங்கம் மிகப் பெரிய நோக்கங்களோடு இப்புதிய ஆண்டினை தொடங்குகிறது. நம் அனைவரும் இணைந்து செயல்படும் போது நம் நோக்கங்களை நாம் எளிதாக அடையலாம். பிப்ரவரி மாத ஆய்வு இதழுக்கான தலைப்பு திருச்சபை **வரலாற்றில் இரத்த சாட்சிகள்** உங்களுடைய வரலாற்றின் தொகுப்புகளை 15ம் தேதிக்குள் எழுதி அனுப்புமாறு நினைவுபடுத்துகிறேன்.

புதிய ஆண்டில் எல்லா நன்மைகளையும், வளங்களையும் பெற திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாக வாழ்த்துகிறேன். நம்முடைய வரலாற்று சுவடுகள் மாத ஆய்விதழை உங்கள் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் புத்தாண்டு பரிசாக அறிமுகம் செய்து நம் வரலாற்று சங்கத்தோடு இணைந்து செயல்பட அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

தேவகிருபை நம் அனைவரோடும் இருப்பதாக !

கிறிஸ்துவுக்குள்

***மன்னா செல்வகுமார்***


கிறிஸ்தவ **வரலாற்றுச் சுவடுகள்**

**பதிப்பாசிரியர் : மன்னா செல்வகுமார்**

**வடிவமைப்பு : சுஜித்.S**





**அலுவலக முகவரி**

கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (திருநெல்வேலி)

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: +91 9176780001
+91 7538812218
04633 290401



# ஐரோப்பியர்கள் தரங்கம்பாடி

ராமு பீட்டர்
சென்னை

17 ஆம் நூற்றாண்டின் ஆரம்பம் அந்த காலகட்டத்தில் தான் பல்வேறு நாடுகளை சார்ந்த கம்பெனியர் இந்தியாவை நோக்கி வியாபார படையெடுப்பு எடுத்து வந்த இவர்கள் முழுவதுமாக தங்களுடைய சுய நலன் சார்ந்தே இருந்து வந்தனர். அப்படியே தங்களுக்கென்று மாட மாளிகைகள் அமைத்துக் கொள்வதிலும், செல்வச் செழிப்பில் தங்களை உயர்த்திக் கொள்வதிலும் அக்கரை காட்டி செயல்பட்டு வந்தனர். அதேசமயம் தங்களுடைய நாட்டின் செல்வாக்கினை நிலைநிறுத்திக் கொள்ளவும், அதிக முயற்சி செய்து அதிலும் தாங்கள் எடுத்துக்கொண்ட இலக்கினை அடைய பெரும் முயற்சி எடுத்து ஈடுபாட்டுடன் செயல்பட்டு வந்தனர். அதேசமயம் அவர்கள் தங்கள் நடைமுறை வாழ்க்கையினை உலகப்பிரகாரமாக மது அருந்துவதிலும், பெண்களுடன் சம்போக சுகத்திலும் எப்போதுமே திளைத்திருக்க விரும்பியே அதிகம் ஈடுபாடு கொண்டவர்களாயிருந்தனர். இப்படிப்பட்ட காரணங்களுக்காகவே இந்திய மக்களை வேலைக்கு அமர்த்தியும் அவர்கள் விருப்பத்திற்கு பணிசெய்யும்படியும் வற்புறுத்தி வந்தனர். இப்படிப்பட்ட இந்திய மக்களை அடிமைகளாகவும் விற்பனை செய்தனர். இப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்ந்து வந்தவர்கள் வேற்று நாட்டு கம்பெனியார் அதிலும் கிறிஸ்தவ மதத்தை பரப்பும் மிஷனரிகள் மற்றும் கிறிஸ்தவ ஆன்மீக பற்று கொண்டவர்கள் போன்றவர்களை மற்ற கம்பெனியார் இந்தியாவிற்குள் அனுப்புவதை அதிகமாக எதிர்ப்பு தெரிவித்து தடுத்து வந்தனர்.

இதன் காரணம் என்னவென்று நாம் கவனித்துப் பார்ப்போமானால் முன்பு வந்தவர்கள் தாங்கள் வாழ்ந்து வந்த கறைபடிந்த வாழ்க்கை (பாவச்செயல்கள்) நிறைந்த தங்களுடைய வாழ்க்கை முறைமைகளை கண்டிப்பதுடன் தங்களுடைய சீர்கேடான, ஒழுக்கமில்லா வாழ்க்கை முறையை குற்றப்படுத்தி தங்கள் சீர்கேட்டினை கண்டிப்பதுடன் தங்களை இந்தியாவை விட்டு வெளியேற்றவும் செய்வார்கள் என்ற எண்ணம் அவர்களுக்குள்ளே இருந்ததினால் தான்.

இந்தியாவில் தாங்கள் மட்டுமே நிலையான ஆட்சி புரிய வேண்டும் என்று அப்போதைய டச்சுக் கம்பெனியும் மறுபக்கம் தங்களைப் போலவே வணிகத்திலும், ஆயுதத்திலும் செல்வாக்கிலும் தங்களைவிட வேறு எந்த கம்பெனியும் முன்னிலை வகித்துவிடக்கூடாது என்று போர்த்துக்கீசிய கம்பெனியும் ஒருவரையொருவர் அவ்வப்போது சண்டையிட்டுக் கொண்டே வந்தனர். இப்படியாக டச்சுக்காரர்கள் கி.பி.1611-ல் போர்த்துக்கீசியரை அடித்து துரத்திடும் பணியில் ஈடுபட்டிருந்த வேளையில் டென்மார்க்கில் உள்ள பிரடெரிக் அரசருக்கு இது தெரிய வந்தது. உடனே அவர் (கோபன் கேஹனில்) கி.பி. 1616-ல் ஓர் கிழக்கிந்திய கம்பெனியை டென்மார்க் தலைநகரில் நிறுவினார். அப்படி நிறுவப்பட்ட அந்த கம்பெனிக்கு அதிக அதிகாரங்களை கொடுத்தும், இந்தியாவில் அனைத்து வியாபாரங்களிலும் முதலிடம் வரவேண்டும், கிழக்கிந்திய கம்பெனியின் செல்வாக்கு எப்போதும் வளர்ந்த நிலையிலேயே இருக்க வேண்டும் என்று அறிவுறுத்தி வந்தார். இந்த கிழக்கிந்திய கம்பெனி கி.பி.1620ல் அட்மிரல் ஒவ்கிட் (1594-1660) என்ற தளபதியின் தலைமையின் கீழ் இந்தியாவில் உள்ள தமிழகத்தின் சோழ மண்டல கடற்கரைக்கு வந்தடைந்தனர். அந்த சமயத்தில் தஞ்சையை ஆண்ட இரகுநாதநாயக்கர் என்னும் மன்னர் இந்த கிழக்கிந்திய கம்பெனிக்கு ஒரு குறுகலான பகுதியில் அமைந்த கடற்கரை ஓரமாக கோட்டை கொத்தளங்களை அமைத்துக்கொள்ள ஒப்பந்தம் செய்து (கி.பி. 1600 முதல் 1634 வரை) 1620 ஆம் ஆண்டு அனுமதி அளித்தார். அந்த ஒப்பந்தப்படி 8 கி.மீ. நீளமும் 4 கி.மீ. அகலமும் பரப்பளவு உள்ள இந்த இடத்தை ஓர் ஆண்டு வாடகையாக ரூபாய் 3111 (மூன்றாயிரத்து நூற்றி பதினொன்று மட்டும்) நிர்ணயித்து ஒப்பந்தம் செய்ததுடன் தரங்கம்பாடியை சுற்றி உள்ள கிராமங்களில் வரி வசூலிக்கவும் டேனிஷ் அரசு அனுமதி பெற்றுக்கொண்டது. இந்த ஒப்பந்தம் தங்க இலையில் எழுதப்பட்டது. தற்போது அது கோபன் கேஹனில் உள்ள அரசு காப்பகத்தில் உள்ளது. இன்றைக்கும் நாம் அங்கு சென்றால் சுமார் 25 (இருபத்தைந்து) கிராமங்கள் இருந்திருக்கலாம் என்று கணிக்கப்படுகிறது. இங்குதான் டென்மார்க் தேச கம்பெனி (டேனிஷ் கம்பெனி) டேன்ஸ்பர்க் என்ற கோட்டையை கட்டினார்கள். இந்த இடம் தற்போது தரங்கம்பாடி என்று அழைக்கப்படுகிறது. இதுவே டேனிஷ்காரர்கள் கட்டிய இரண்டாவது பெரிய கோட்டை. இது நாகை மாவட்டம் சென்னையிலிருந்து 288 கி.மீ. தொலைவில் உள்ளது. இதற்கு அலை நகர் என்று வேறு ஒரு பெயரும் உண்டு. காவிரி டெல்டா பகுதிக்கு அப்பால் உள்ள இந்த இடம் குறுகிய கால அளவில் முக்கியத்துவம் அடைந்தது. நாட்கள் செல்லச் செல்ல இது இந்தியாவில் புரோட்டஸ்டண்ட் மிஷனரிகளின் தொட்டில் என்றும்

அழைக்கப்பட்டது.

இங்குள்ள மன்னர் தெரு என்னும் தெரு கிரேக்க நகரின் அமைப்பினைப் போல நவீன அமைப்பாக இருக்கும். இங்கு வாழ்ந்த டேனிஷ்காரர்கள் இந்தியாவில் ஆங்காங்கே இருந்த ஐரோப்பியரைப் போன்று கிறிஸ்தவ மிஷனரிகளின் திருப்பணிகளை செய்வதற்கு அதிக உற்சாகத்தையும், ஆர்வத்தையும் கொடுத்துவிட்டால் அவர்கள் ஊழியப் பணிக்கு சென்று விடுவார்கள் தங்களுடைய சொந்த வேலைகளுக்கு ஆட்கள் கிடைக்காது என்றும் அவர்களுக்கு செலவு செய்வது முடியாது என்றும் கருதி மிஷனரிகள் ஊழியம் ஆரம்பிக்கப்பட்டது என்றும் அப்படி ஊழியங்கள் ஆரம்பிக்க ஏதுவாக உள்ள வழி வாசல்கள் அனைத்தையும் அடைத்துவிட்ட படியால் சில மிஷனரிகள் ஊழியம் செய்ய நினைத்தும் முடியாமல் போயிற்று. ஆனாலும் மிஷனரிகள் தொடர் ஜெபத்தில் தேவன் கிரியை செய்ய வேண்டி ஜெபித்து வந்தனர். ஜெபத்தைக் கேட்ட தேவன் அதிசயமாக அந்நாட்களில் கிரியை செய்தார். இந்த சூழ்நிலையில் தான் நான்காவது பிரடெரிக் டென்மார்க் அரசராக இருந்தபோது இந்தியாவில் கிறிஸ்தவ மிஷனரிகள் ஊழியத்திற்கு வழி திறந்தது.




இந்த சமயத்தில் டேனிஷ் வீரர்களுக்கும் மீன்பிடி கிராமங்களுக்கும் சண்டை ஏற்பட்டது. அதில் கிராம மக்களில் முன்னின்று சண்டையிட்ட ஆண்களில் சிலர் இறந்து போய்விட்டார்கள். அப்படி இறந்தவர்களில் ஒரு மனிதனின் மனைவி ஒருத்தி, தான் விதவை ஆகிவிட்ட காரணம் மற்றும் தான் எந்தவித உதவியும் இன்றி இருக்கும் அவல நிலையை எடுத்துக்கூறி தனக்கு பொருளுதவி செய்ய வேண்டி, பொருளுதவிக்காக டென்மார்க் அரசாங்கத்திற்கு விண்ணப்பம் செய்தாள். இந்த விண்ணப்பத்தைக் கண்ட பிரடெரிக் மன்னரின் உள்ளம் உடைந்தது. மன்னர் கிறிஸ்தவ ஒழுக்கமுடைய மனிதராக விளங்கியவர். இவர் லுத்தரன் திருச்சபை முழுமைக்கும் தலைவராக விளங்கியவர். கடல் கடந்த பிற மக்களுக்கு நற்செய்திப் பணி செய்து தேவையான அனைத்து உதவிகளையும் அந்த மக்களுக்கு செய்ய வேண்டும் என்று விருப்பம் கொண்டிருந்தவர் அவருடைய ஆர்வத்தினை தூண்டும்படி வந்த கடிதம் தான் இந்த பெண்மணி எழுதியது. இந்த கடிதத்தை கண்ட பிரடெரிக் மன்னர் அந்த விதவை பெண்மணிக்கு தேவையான அனைத்து உதவிகளையும் செய்ய கட்டளையிட்டதுடன் நில்லாமல் இந்திய மக்கள் மீதும் அதிலும் அதிகமாய் தமிழக மக்கள் மீதும் அதிக கரிசனை கொண்டவராக விளங்கினார். இந்திய மக்கள் இயேசு கிறிஸ்துவை அறிய வேண்டும் என்றும் இதுவரையிலும் இந்திய மக்கள் கிறிஸ்துவை அறிந்துகொள்ள வேண்டிய அறிவிலும், கிறிஸ்துவின் அன்பை ருசிக்கவும் கிறிஸ்துவில் வளர, கிறிஸ்தவ வாழ்க்கையில் முன்னேற்றம் காண நான் ஒன்றும் செய்யவில்லையே என்ற மன உந்துதலில் இருந்த படியாலும் உடனடியாக தாம் வணங்கி வந்த ஆத்தும நேசரை இந்தியர்களும் தங்களுடைய சொத்தாக கொண்டு உயர்ந்த நிலையை அடைய வேண்டும் என்ற வழியதனையும் நான் காண்பிக்காமல் இருந்தால் நானே மிகப் பெரிய குற்றம் புரிந்தவனாக இருப்பேன் என்று அன்று உணர்ந்து அப்படியே இராமல் உடனடியாக இந்தியாவிற்கு சுவிசேஷம் கூறவேண்டும் என்ற தரிசனம் உடைய சுவிசேஷகர்களை, ஊழியர்களை அனுப்ப திட்டமிட்டு அதன் காரணமாக முதலில் டேனிஷ் கம்பெனியினர் வாழ்ந்த இடங்களுக்கு எல்லாம் ஊழியர்களை அனுப்பினார் அப்படி அனுப்பப்பட்டவர்கள் அனைவரும் ஊழியம் மட்டுமே செய்ய வேண்டும் என்ற நிபந்தனையின் பெயரிலே இந்தியாவிற்கு அனுப்பப்பட்டனர்.

காரணம் என்னவென்று பார்ப்போமானால் இதற்கு முன்பும் கூட அநேக ஊழியர்கள் வந்து இருக்கிறார்கள் - இந்தியாவில் தங்கி இருக்கிறார்கள் - சொகுசான வாழ்க்கை வாழ்ந்து இருக்கிறார்கள் - மரித்தும் போய் இருக்கிறார்கள். அவ்வளவுதான். ஆனால் ஒரே ஒரு வேலை மட்டும் செய்திருக்கிறார்கள். என்னவென்றால் டேனிஷ்காரர்கள் பிடித்துவரும் சில மக்களுக்கு (ஜனங்களுக்கு) (அ) நபர்களுகட்கு ஞானஸ்நானம் கொடுத்திருக்கிறார்கள் பின்னர் அவர்களை அடிமைகளாக விற்றும் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர்தான் இந்தியாவில் டேனிஷ் அப்போஸ்தலர் என்று அழைக்கப்பட்ட மஜிஸ்பர் ஜேக்கப், இவரைப் போன்றவர்கள் தான் ஊழியர்களாக மிஷனரிகளாக உழைத்திருக்கிறார்கள்.

ஆகவேதான் பிரடெரிக் மன்னர் தான் அனுப்பிய மிஷனரிகளிடம் ஊழியம் செய்ய வேண்டும் என்ற கட்டளையுடன் அனுப்பப்பட்ட ஊழியர்களில் செம்மொழியாம் தமிழ் மொழியில் இறைபணி புரிய செந்தமிழ் நாட்டிற்கு வந்த பர்த்தலோமேயு சீகன்பால்க் என்பவரும் அவருடன் வந்த ஹென்ரிச் புளுட்ச்சோ என்பவரும், இந்தியாவிற்கு வந்த சீர்திருத்த திருச்சபையின் முதல் மிஷனரி தான் சீகன்பால்க். இவருடைய வாழ்க்கையும் அவர் செய்த சுவிசேஷ அறிவிப்பு பணியும் இந்திய கிறிஸ்தவ மக்களின் வாழ்க்கையில் பெரும் தாக்கத்தையும் மிஷனரி பணியின் தன்மைகள் குறித்த ஈடுபாட்டையும் ஏற்படுத்தி உள்ளது. சீகன்பால்க்கை வசப்படுத்திய மிஷனரி பணி பாரமும், ஆசையும், இந்திய சமயங்கள் மற்றும் மொழிகளில் இருந்த ஆழ்ந்த சிந்தனை, இந்திய பக்திக்கான சிறப்பு - அவருயை நுண்ணறிவு இந்திய கலாசாரத்தை அறிந்து திறமையுடன் செயல்பட்ட விதம், மிஷனரி பணியை கையாண்ட விதம் பல்வேறுவித சோதனைகளில் மனந்தளராத நெஞ்சுரம் கொண்ட ஜெப வீரன்தான் நம் இந்திய மண்ணின் முதல் புரோட்டஸ்டண்ட் மிஷனரி.



# புதிய வரவால்

# புதிய விடியல்

## சமாரியாவுக்கு சந்தோஷம்

அருள்திரு முனைவர் ச. இராஜசேகரன்
திருச்சி

இருள் நிறைந்த உலகில் ஒளியாக கடவுள் பிறந்ததால் பூமியில் பாவ இருள் மரித்து இரட்சிப்பு என்னும் புனித விடியல் தோன்றியது: ஆன்மிக உயிரற்றவர்கள் உயிர்ப்பெற்றனர், இனி மரணம் இல்லை என்னும் உறுதியான இறுதிநிலையை எட்டினர். துக்கங்கள் மறைந்து மகிழ்ச்சி தழைத்தது. கடவுளின் பிரியத்தை மனிதன் அனுபவிக்கலானான். பிரிவுகள் ஒன்று சேர்ந்தது. பிரமாண நுகம் மெதுவாயும் இலகுவாயுமானது. அடைய முடியாத இடத்தில் உள்ள கடவுள் நம்மிடம் வந்ததால் நாம் கடவுளை அடையும் பெரும் பாக்கியம் அடைந்தோம். பரிசுத்த ஆவி உடன் இருந்து, நீதியும் தேவபக்தியும் உள்ளவனாயும், இஸ்ரவேலின் ஆறுதல் வரக்காத்திருந்த சிமியோனிடம் கடவுள் கர்த்தருடைய கிறிஸ்துவை நீ காணுமுன்னே மரணமடையமாட்டாய் என்று பரிசுத்த ஆவியினாலே அவனுக்கு அறிவிக்கப்பட்டுமிருந்தது. அவன் ஆவியின் ஏவுதலினால் தேவாலயத்திலே வந்திருந்தான். இயேசுவை நியாயப்பிரமாண முறைமையின்படி செய்வதற்குத் தாய் தகப்பன்மார் அவரை ஆலயத்திற்கு கொண்டு வருகையில், அவன் இயேசுவைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டு, தேவனை ஸ்தோத்திரித்து: 'ஆண்டவரே, உமது வார்த்தையின்படி உமது அடியேனை இப்பொழுது சமாதானத்தோடே போகவிடுகிறீர்; புறஜாதிகளுக்குப் பிரகாசிக்கிற ஒளியாகவும், உம்முடைய ஜனமாகிய இஸ்ரவேலுக்கு மகிமையாகவும், தேவரீர் சகல ஜனங்களுக்கும் முன்பாக ஆயத்தம்பண்ணின உம்முடைய இரட்சணியத்தை என் கண்கள் கண்டது என்றான். அவரைக்குறித்துச் சொல்லப்பட்டவைகளுக்காக யோசேப்பும் அவருடைய தாயாரும் ஆச்சரியப்பட்டார்கள் (லூக்கா 2:25-33). யோசேப்பு, மரியாள் மற்றும் சிமியோன் என்னும் தனிநபர்களின் வாழ்வில் இயேசுவின் வரவால் ஏற்பட்ட தாக்கம் போன்று சமாரியா பட்டணத்திற்கு பிலிப்பு மூலம் இயேசுவின் வரவால் ஏற்பட்ட தாக்கமே (அப்போஸ்தலர் 8:1-25) இந்த புதிய வரவால் புதிய விடியல்...

**செய்தி**

உலகமெங்கும் போய் சர்வ சிருஷ்டிகளுக்கும் நற்செய்தியை அறிவியுங்கள் என்ற இயேசுவின் கட்டளையின்படி முதலாவது, எருசலேமிலும், யூதேயாவிலும் பின்பு சமாரியாவிலும் அதன்பின்பு உலகம் முழுவதும் சென்று பிரசங்கிக்க இயேசுவின் அப்போஸ்தலர்கள் புறப்பட்டார்கள். தோமா இந்தியா வந்தார். மற்றவர்கள் எருசலேமிலேயே தங்கி நற்செய்தி அறிவித்தார்கள். விசுவாசிகள் பெருகிக்கொண்டிருந்த போது, பவுலால் ஸ்தேவான் கொலைசெய்யப்பட்ட பின்பு விசுவாசிகள் பல்வேறு இடங்களுக்கு சிதறிப்போனார்கள். போனவர்களில் பெரும்பாலானோர் கிறிஸ்துவைப்பற்றிய செய்தியை அறிவித்தார்கள். அவ்வாறு சென்றவர்களில் பந்தி விசாரிப்புக்காக தெரிந்தெடுக்கப்பட்டவர்களில் ஒருவனான பிலிப்பு சமாரியாவுக்கு சென்று கிறிஸ்துவைப் பிரசங்கித்தான். அவனுடைய செய்தியை அவர்கள் ஒருமனப்பட்டு கவனித்தார்கள்.

சத்தியத்தை அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுவிக்கும் என்ற இயேசுவின் வாக்கு சமாரியா பட்டணத்தில் உறுதிசெய்யப்பட்டது. தேவனுடைய ராஜ்யத்துக்கும் இயேசுகிறிஸ்துவினுடைய நாமத்துக்கும் ஏற்றவைகளைக்குறித்து, பிலிப்புவின் நம்பிக்கை பிரசங்கத்தை விசுவாசித்த புருஷரும் ஸ்திரீகளும் மாயவித்தைக்காரனான சீமோனும் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

சமாரியர் தேவவசனத்தை ஏற்றுக்கொண்டதை எருசலேமிலுள்ள அப்போஸ்தலர்கள் கேள்விப்பட்டு, பேதுருவையும் யோவானையும் அனுப்பினார்கள். அவர்கள் வந்து பரிசுத்த ஆவியைக் குறித்து பிரசங்கித்து ஜெபித்த போது பரிசுத்த ஆவியானவர் விசுவாசிகளின் மேல் இறங்கியதைப் பார்த்த மனந்திரும்பிய மாயவித்தைக்காரன் சீமோன், பணத்தைக் கொடுத்து இவ்வரத்தை வாங்க நினைத்தான். அவனுக்கு பேதுரு பணத்தினாலே கடவுளுடைய வரத்தை விலைக்கொடுத்து வாங்க முடியாது என்றும் உன் துர்க்குணத்தை விட்டு மனந்திரும்பு என்னும் எச்சரிப்பின் செய்தி அவனை மாற்றியது. பிலிப்பு, பேதுரு மற்றும் யோவானுடைய சாட்சியுள்ள புதிய செய்தியின் சாரம் சமாரியாவுக்கு புதிய விடியல் சந்தோஷத்தைக் கொண்டு வந்தது. இன்றும் இந்தியாவில் பல்வேறு பட்டணங்களில் உள்ள சாமானியர்களுக்கும் சீமோனைப் போல பிரபல்யமானவர்களுக்கும் மனமாற்றத்திற்கு ஏற்ற செய்தியை சாட்சியாகக் கொடுத்தால் இந்தியப் பட்டணங்கள் இயேசு இரட்சகரை சந்தித்து இரட்சிப்படையும்.

**செயல்**

சொல்லைவிட செயல் அதிக சக்தி வாய்ந்தது. சொல்லும் செயலும் ஒன்றானால் செய்வதெல்லாம் சித்திப்பெறும். பிலிப்பு சமாரிய பட்டணத்திற்கு சென்று நற்செய்தி அறிவித்து, பல்வேறு அதிசயங்களை செய்வதற்கு முன்பே அநேக காலமாய் சீமோன் மாயவித்தைகளை செய்து தன்னை பெரியவனென்று சொல்லி, ஜனங்களைப் பிரமிக்கப்பண்ணிக்கொண்டிருந்தான். தேவனுடைய பெரிதான சக்தி இவன்தான் என்று எண்ணி, சிறியோர் பெரியோர் யாவரும் அவனுக்குச் செவிகொடுத்து மதித்து வந்தார்கள். பிலிப்பு ஊழியத்தால் அநேகரிலிருந்து அசுத்த ஆவிகள் மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு அவர்களை விட்டுப் புறப்பட்டது. அநேகத் திமிர்வாதக்காரரும் சப்பாணிகளும் குணமாக்கப்பட்டார்கள். பேதுருவும் யோவானும் விசுவாசிகள் மேல் கைகளை வைத்து

ஜெபித்தபோது பரிசுத்த ஆவியால் அவர்கள் நிறைந்தார்கள். பிலிப்பு சமாரியாவில் செய்த அதிசயங்களைக் கண்ட பட்டணத்து ஜனங்களும் பட்டணத்தையே பிரமிக்கப்பண்ணின சீமோனும் சந்தோஷமடைந்தார்கள்.

இந்தியப் பட்டணங்கள் இன்று மெய்யான சந்தோஷத்தை தொலைத்துவிட்டு, பல்வேறு பாவதுன்பங்களால் துக்கத்துடன் இருக்கிறது. கிறிஸ்துவின் செயற்கரிய செயல்கள் பட்டணங்களில் வலுவாய் வெளிப்பட்டால் பட்டணங்கள் மகிழ்ச்சியுறும். பட்டணங்களில் கிறிஸ்து அறிவிக்கப்பட்டு அதிசயம் மற்றும் அற்புதங்கள் நிகழ்த்திய நிகழ்ச்சிகள் இன்று காண்பது அறிதாயிருக்கிறது. பட்டணங்கள் தோறும் மீண்டும் நற்செய்தி அற்புத கூட்டங்கள் நடைபெறவேண்டும்: அற்புத செயல்களால் பட்டணங்கள் ஆனந்தத்தில் களிகூறவேண்டும்.

**செம்மை**

பட்டணங்கள் செம்மையாயிருந்தால் தான் தேசம் செம்மையுறும். பட்டணங்களே சீர்த்திருத்தத்திற்கு வழிவகுத்ததாக வரலாறு சான்றளிக்கிறது. பட்டணங்களில் தான் தலைமையகங்கள் செயல்படுகிறது. தலைமை செம்மையாக இருந்தால் தான் கீழானவர்கள் செம்மையாயிருக்க முடியும்? பட்டணங்களில் இருப்பவர்களே அதிக பாவம் செய்வதற்கான வாய்ப்புகள் உண்டு. நற்செய்தி பட்டணங்களில் இருந்து கிராமங்களுக்கு செல்லவேண்டுமானால், பட்டணங்கள் செம்மையாக வேண்டும் என்பதை சமாரியா பட்டணத்திற்கு சத்தியம் வந்து வல்ல செயல்களால் உறுதிசெய்யப்பட்டு, கிராமங்களுக்கும் சென்றது என்று வரலாறு கூறுகிறது. பிலிப்பு, பேதுரு மற்றும் யோவான் கர்த்தருடைய வசனத்தைச் சாட்சியாய் பட்டணத்தில் அறிவித்துச் சொன்ன பின்பு, அநேக கிராமங்களில் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, எருசலேமுக்குத் திரும்பி வந்தார்கள்.

வலது கைக்கும் இடது கைக்கும் வித்தியாசம் தெரியாத நினிவே பட்டணத்தாரைப் போன்றும், சமாரியாவில் உள்ள சீமோனைப் போன்று தேவனுடைய வரத்தை பணத்தினாலே சம்பாதித்துக்கொள்ளலாமென்று நினைக்கிறவர்களும் உண்டு. அவர்கள் செம்மைப்பட இன்னும் 40 நாளில் பட்டணம் அழியும் என்று யோனா செய்த நியாயத்தீர்ப்பான எச்சரிப்பின் செய்தியும், உன் பணம் உன்னோடேகூட நாசமாய்ப் போகக்கடவது, உன் இருதயம் தேவனுக்கு முன்பாகச் செம்மையாயிராதபடியால், இந்த விஷயத்திலே உனக்குப் பங்குமில்லை பாகமுமில்லை. நீ உன் துர்க்குணத்தைவிட்டு மனந்திரும்பி, தேவனை நோக்கி வேண்டிக்கொள்; ஒருவேளை இருதயத்தின் எண்ணம் உனக்கு மன்னிக்கப்படலாம், நீ கசப்பான பிச்சிலும் பாவக்கட்டிலும் அகப்பட்டிருக்கிறதாகக் காண்கிறேன் என்ற பேதுருவின் செய்தியும் அரசன் முதல் ஆண்டி வரை அந்த தாக்கத்திற்கு உட்பட்டார்கள். அதனால் நினிவே பட்டணத்தார் பாவ உணர்வடைந்து கடவுள் பயத்துடன் தங்களைத் தாழ்த்தி மனந்திரும்பினார்கள், அதனால் கடவுள் வலது கைக்கும் இடது கைக்கும் வித்தியாசம் தெரியாத இவர்களுக்காக நான் பரிதபியாமல் இருப்பேனோ என்று அவர்களை அழிக்காமல் விட்டார். அதைப் போலவே சீமோன்: நீங்கள் சொன்ன காரியங்களில் ஒன்றும் எனக்கு நேரிடாதபடிக்கு, எனக்காகக் கர்த்தரை வேண்டிக்கொள்ளுங்கள் என்ற அவனுடைய செம்மையான மனமாற்றத்துடன் சமாரியா பட்டணத்தின் ஊழியம் நிறைவடைகிறது. செம்மையானவர்களின் பரிகாரியனான கர்த்தர் சமாரியாவில் அநேக பரிகாரப்பணியை செய்தார்.

இயேசுவின் புதிய வரவால் சமாரியபட்டணத்திலே மிகுந்த சந்தோஷம் உண்டானது. பட்டணத்தில் ஒருமனம் உருவானது: அது அநேகருடைய மனமாற்றத்தில் வெளிப்பட்டது. அநேக வியாதியஸ்தர்கள் குணமானார்கள், பிசாசு பிடித்திருந்தவர்கள் விடுவிக்கப்பட்டனர். பட்டணங்களைவிட்டு பிசாசுகள் பயந்து ஓடின. மக்களை தவறான பாதையில் பிரமிக்கப்பண்ணின சீமோனையே பிரமிக்கப்பண்ணியது இயேசுவின் வரவு. கடவுளுடன் பங்கில்லாத காரியங்கள் பறந்துபோயின.

செம்மையில்லாதவைகள் செம்மையானது. பல கிராமங்களுக்கும் நற்செய்தி பரவுவதற்கு காரணமாயின. இயேசுவின் வரவால் இந்த பூமி புனிதம் அடைந்து புத்துயிர் பெற்று இரண்டாயிரம் ஆண்டுகள் பல்வேறு பட்டணங்களை இரட்சித்து, பட்டணங்களிலிருந்து இரட்சிப்பை அனுபவித்தவர்கள் உலகமெங்கும் இரட்சிப்பின் நற்செய்தியை அறிவித்து, பல்வேறு புதிய பட்டணங்கள் உருவாகக் காரணமாயிருந்தார்கள்.

2020 என்ற பேஷன் நம்பர் கொண்ட கடந்த ஆண்டை பல்வேறு கோணங்களில் பலதரப்பட்டவர்கள் தங்கள் வாழ்வின் அடுத்த கட்ட இலக்காக நிர்ணயித்தார்கள்.

பலர் 2020ஐ குறித்து தீர்க்கதரிசனங்கள் என்ற பெயரில் அவர்களின் மனவிருப்பங்களையும் மக்களின் எதிர்ப்பார்ப்புகளையும் குறிப்பறிந்து குறிச்சொன்னார்கள். ஆனால் அனைத்தும் பொய்யாய்ப்போகும் விதமாக உலக வரலாற்றில் முதல் முறையாக அனைத்து வழிபாட்டு ஸ்தலங்களும் மூடப்பட்டன. கடவுளின் சுத்திகரிக்கும் பணி வழிபாட்டு ஸ்தலங்களையும், வழிபடுகிறவர்களையும், வழிபாடு நடத்துகிறவர்களையும் நோக்கியிருந்தது. இன்னும் அதன் இறுதிநிலையை எட்டவில்லை. ஒவ்வொரு விநாடியும் நம் வாழ்வில் புதிய வரவுதான். புதிய வரவு புதிய விடியலை நோக்கிச் செலுத்துவது கடவுளுடைய கையிலும் நமது கையிலும் இருக்கிறது. இயேசுவுடன் விடியும் ஒவ்வொரு விநாடியும், நிமிடமும், மணியும், நாளும், வாரமும், மாதமும், வருடமும் புதிய விடியலுக்கான ஆரம்பம், வளர்ச்சி, முதிர்ச்சி மற்றும் நிறைவாகவே இருக்கும். தனிநபர் வாழ்வில் மட்டுமல்ல, குடும்பம், திருச்சபை, சமூகம் மற்றும் தேசம் அனைத்திற்கும் இந்த 2021ஆம் ஆண்டு இயேசுவின் ஒவ்வொரு ஆள்த்துவத்தின் புதிய வரவால் அன்றாடம் நம்வாழ்வில் புதிய விடியலை வரவேற்போம்.

நம் வாழ்வின் புதிய விடியல் நம் தேசத்தில் உள்ள பட்டணங்கள் மற்றும் கிராமங்கள் அனைத்திலும், ஆன்மீகம், சமூகம், பொருளாதாரம் மற்றும் அரசியல் என்று அனைத்து நிலைகளிலும் இந்த ஆண்டில் ஆட்சி செய்வதாக! புதிய விடியலின் சூரியன், சந்திரன் மற்றும் நட்சத்திரங்களுக்கெல்லாம் ஒளியாயிருக்கிற இயேசு நம் மனவிருப்பங்களின் புதிய விடியலை ஒவ்வொருநாளும் கொண்டுவருவராக!! ஆமென்!!!





# சதி என்னும் சதீ

மோ ஜோ,
முதலூர்

1802ஆம் ஆண்டு வெல்லஸ்லி பிரபு 'சதி ' (sati) பற்றிய ஆய்வறிக்கையை சமர்ப்பிக்குமாறு வில்லியம் கேரியை கேட்டுக்கொண்டர். கேரி அதை ஏற்றுக்கொண்டு கள ஆய்வில் இறங்கினார், கல்கத்தாவை சுற்றிய முப்பது மைல் பரப்பளவில் மட்டும் கடந்த வருடத்தில் 438 விதவைகள் எரிக்கப்பட்டிருக்கிறார்கள் என்ற திடுக்கிடும் தகவல் அவருக்குக் கிடைத்தது. இதை அறிந்து கேரி சும்மா இருப்பாரா என்ன? உடனே இந்தத் தகவல்களை அரசிடம் சமர்ப்பித்து சதியை தடைசெய்ய கோரிக்கைவைத்தார். ஆனால், துரதிஷ்டவசமாக இதன் மேல் நடவடிக்கை எடுக்கும் முன் வெல்லஸ்லி பிரபு இந்தியாவைவிட்டு வெளியேற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அவரைத் தொடர்ந்து வந்த பிரபுக்களில் எவரும் மக்களின் மதஉணர்வோடு சம்பந்தப்பட்ட இந்த 'சதியை' தடைசெய்யத் தயக்கம்காட்டினர். சதிக்கு எதிரான சட்டப்பூர்வ தடை இன்னும் கால் நூற்றாண்டிற்கு நிறுத்திவைக்கப்பட்டது. கேரி தன்னை ஒரு ஊழியக்காரனாக மட்டும் பார்க்கவில்லை, ஒரு போராட்ட வீரனாகவும் பார்த்தார். அவரைப் பொறுத்தவரை, போராட்டம் என்றால் இன்று எண்ணப்படுவதுபோல வெறுமனே கிளர்ந்தெழுவது மட்டும் கிடையாது. மக்களுக்கு அறிவூட்டுவதும் போராட்டத்தின் ஒரு பகுதி என்று எண்ணினார். நிறைய ஆராய்ச்சி செய்து, தொடர்ந்து சதி பற்றி பல கட்டுரைகளை எழுதினார். அவர் 'Friend of India' என்ற தனது செய்தித்தாளில் 'சதி' பற்றி வெளியிட்ட கட்டுரை ஒன்று பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் விவாத பொருளாக மாறியது.

இந்தப் பழக்கத்தை ஒழிக்க அவர் தொடர்ந்து ஜெபித்து வந்தார். மற்றவர்களையும் ஜெபிக்கசெய்தார். அவரது ஜெப நண்பர்களில் மிக முக்கியமானவர் இங்கிலாந்து பாராளுமன்றத்தைச் சேர்ந்த வில்லியம் வில்பர்போர்ஸ். இவர் பிரிட்டனின் அடிமை வியாபார ஒழிப்பு இயக்கத்தின் தலைவர் என்பது குறிப்பிடத்தக்கது. ஆப்ரிக்க அடிமைகளின் விடுதலைக்காகவும், இந்திய விதவைகளின் நல்வாழ்வுக்காகவும் இவரும் தொடர்ந்து போராடி ஜெபித்துவந்தார்.

இறுதியில், கேரி ஆவலோடு எதிர்பார்த்த அந்த நாளும் வந்தது. டிசம்பர் 4, 1829 அன்று பென்டின்க் பிரபு 'சதி' சட்டவிரோதமானது என்று அறிவித்து ஆணை வெளியிட்டார். அந்த அரசாணை மொழிபெயர்ப்புக்காக டிசம்பர் 6ஆம் தேதி வில்லியம் கேரிக்கு அனுப்பப்பட்டது. அதைப்பார்த்து, மகிழ்ச்சியில் துள்ளினார் கேரி. ஆம்! இனி விதவைகள் மற்ற மனிதர்களைப்போலசுதந்திரமாய்வாழலாம்! இனி மதத்தின் பெயரால் குழந்தைகள் அனாதைகளாக்கப்படமாட்டார்கள்!.

அன்பான வாசகர்களே! வில்லியம் கேரி இந்தியாவில் நிலவி வந்த சமுதாயத் தீமைகளை ஒழிக்க ஏறெடுத்த முயற்சிகளை நாம் நினைவுகூறுவோம். அறியாதோர்க்கு இதை எடுத்து கூறுவோம். பொது வெளிகளில் இதைப்பற்றி பேசுவோம்! இன்று, நம் ஊரில், நம் தேசத்தில் நிலவிவரும் சமுதாயத் தீமைகளை ஒழிக்க தனி மனிதர்களாய், திருச்சபையாய் பாடுபடுவோம்!

மரணத்துக்கு ஒப்புவிக்கப் பட்டவர்களையும், கொலையுண்ணப் போகிறவர்களையும் விடுவிக்கக் கூடுமானால் விடுவி. (நீதிமொழிகள் 28:11)

---



சுஜித்



# மாட்டுவண்டியே தனது வீடாய்

திரு. ஐய்யாதுரை தனது வாலிப வயதிலே 1917 ஆம் ஆண்டில் தோர்ணக்கல்லிற்கு ஊழியராக வந்தவர். ஆறு மாதங்களிலே, தெலுங்கு வாசிக்கவும், எழுதவும், பேசவும் கற்றுக் கொண்டு தோர்ணக்கல் சேகரத்தை கவனித்து வந்தார். இவர் பிடில் என்ற இசைக்கருவி வாசிப்பதில் வல்லவர். ஜெபவீரர், தனது வாலிப வயதிலேயே தாவீது, சாமுவேலைப் போலத் தன்னையே ஆண்டவரின் ஊழியத்திற்கு அர்ப்பணித்து உண்மையுள்ள ஊழியம் செய்தார். இவர் திருமணமாகாதவராகையால், மாதம்: முழுவதும் ஊழியப் பயணத்திலேயே கழித்தார். இவரது வீடு மாட்டு வண்டிதான். சபையில்லாத கிராமங்களுக்குச் சென்று, மாட்டு வண்டியினடியில் சமைத்து, சாப்பிட்டு அதிலே படுத்துக்கொள்வார். இவ்வாறு பிரயாணம் செய்து, தனது சரீர சுகத்தை விரும்பாது ஊழியத்திற்குத் தேவையான பலத்திற்காகப் பரிசுத்த ஆவியானவரின் வரத்திற்காக ஜெபிப்பார். பிற ஊழியர்களைத்

தனது சொந்த சகோதரர்களாகவே கருதுவார். அவர்களிடம் ஏதேனும் குறைவு காணப்பட்டால், அவரைத் தனியாக அழைத்து தவறை உணர்த்தி, மனந்திரும்பும்படி ஜெபித்து வழி நடத்துவார். இவர் 1919இல் பெத்த முப்பாரம் என்ற கிராமத்திற்குச் சென்று, அங்குள்ள சபையை முன்னேற்றத்திற்கு நேராய் வழிநடத்தியதால், அது சேகரத் தலைமையிடமாக மாறியது. அக்காலத்தில் முப்பாரம், மாட்டேடு, பொட்லாடா, பொம்மக்கல் முதலிய கிராமங்களில் மட்டுமே கிறிஸ்தவர்கள் வசித்ததால், இங்கு மட்டுமே சபை ஊழியர்கள் இருந்தனர். இவர் முப்பாரம் வந்த சிறிது காலத்திலேயே 'வெள்ளை சோளப் பஞ்சம்' என்ற பெரிய பஞ்சம் ஏற்பட்டது. இப்பஞ்சத்தால் கஷ்டப்பட்ட ஏழை கிறிஸ்தவர்களுக்காக, இவர் அரசு வேலைகளுக்கு அலுவலர்களிடம் பேசி, பஞ்ச கால உதவி கிடைக்க வழி மேலும், சிலரைத் தோர்ணக்கல் தேவாலய வேலைக்கு அனுப்பினார். பேராயர் அருட்பெருந்திரு. அசரியா அவர்கள் - இரங்கூனிலிருந்து வரவழைக்கப்பட்ட அரிசியை, முப்பாரம் கொண்டு வந்து ரூ. 1 - க்கு 6 சேர் வீதம் கொடுத்து அற்புதமாக அவர்களைப் போஷித்தார். இப்பஞ்ச காலத்தில் பலர் தங்களது பிள்ளைகளைக் கூட விற்றுவிட்டனர் பலர் மரணமடைந்தனர். இப்படிப்பட்ட மோசமான பஞ்ச காலத்தில், பேராயர் அவர்கள் இரங்கூனிலிருந்து அரிசியை வரவழைத்து, அநேக மக்களைக் காப்பாற்றி போஷித்தார். பஞ்ச காலத்தில் இஸ்ரவேல் மக்களை எகிப்திலுள்ள கோசேனில் யோசேப்பு போஷித்த விதமாக, ஆண்டவர் தனது பிள்ளைகளைப் போஷிப்பதற்காகவே, இவர்களை இப்பகுதிக்கு அனுப்பினார் என்று சொன்னால் மிகையாகாது. இப்பஞ்ச காலத்தில் அநேகர் தங்களது கிராமங்களை விட்டு, பேராயரிடம் அடைக்கலமாகி பின்னர் தங்களது சொந்த கிராமங்களுக்குச் சென்றனர். அவர்களுள் சிலர் தற்சமயம் தோர்ணக்கல் கிரீடாபுரத்தில் வசித்து வருகின்றனர். இவர் கீர்த்தனைகள் பல இயற்றியுள்ளார். அவற்றுள் சிலவற்றை ஆந்திரா கிறிஸ்தவ கீர்த்தனை புத்தகத்தில் காணலாம். இவரது சுவிசேஷ ஊழியத்தின் விளைவாக முப்பாரப் பகுதியில் பல சபைகள் தொடங்கப்பட்டுள்ளன. இவற்றிற்காக இவர் மிகவும் பாரத்துடன் ஜெபிப்பார். இவரது ஜெபத்தின் பயனாக முப்பாரம் சபை மக்கள் விசுவாசத்தில் முன்னேறியுள்ளனர். இவர் தனது சொந்த இடத்திற்குச் சென்று, குருவாக அபிஷேகம் பெற்று, திருமணம் செய்து, பிள்ளைகளுடன் தங்கியிருந்து, சேகரத் தலைவராக நெடுங்காலம் ஊழியம் செய்து வருகிறார் என்று கேள்விப்பட்டு மிகவும் சந்தோஷம் அடைகிறோம். இவர் இப்பகுதிக்காக பிரயாசப்பட்டு ஜெபித்தவர்களுள் மிகவும் முக்கியமானவர் என்று கூறலாம் .

---

# முடிந்து போகாத ஆண்டுகள்

பிலிப் கே மல்லி
மேனாள் ஆயர், கோத்தகிரி, நீலகிரி

அண்மையில் தொலைகாட்சியில் 'சாஷ்டாங்கம் செய்ய வாரும்' என்ற பாடலின் ஒளிபரப்பைக் காண நேர்ந்தது - 'பக்தரே வாரும்' என்ற அற்புதமான பாமாலை அது, ஆனால் 'சாஷ்டாங்கம் செய்ய வாரும்' என்பதன் பொருளை அறியாது பாடியவர் மேடையில் செய்து கொண்டிருந்த சேஷ்டை தான் வேதனையளிக்கிறது. மேடை முழுவதும் பரவிக் கிடந்த இசைக்கருவிகளின் இரைச்சல் செவிகளைத் துளைக்க பாடகரும் அர்த்தமில்லாமல் குதித்துக் கொண்டும் ஆடிக்கொண்டும் இருந்தார். அநேகருக்கு இத்தகைய நிகழ்ச்சிகள் பரவசத்தைக் கொடுத்திருக்கலாம். ஆனால் 'சாஷ்டாங்கம்' என்ற சொல்லின் பொருள் மாயமாகி விடுவதை சிலரே உணர்ந்திருக்க கூடும். அச்சொல்லின் ஆழ்த்தையும் பக்தியையும் அந்த நிகழ்ச்சி வெளிப்படுத்த இயலவில்லை .

நம்முடைய கிறிஸ்தவப் புத்தாண்டு கொண்டாட்டங்களும் கொஞ்சம் குறைய மேற்சொன்ன நிலையிலேயே இருப்பதை நாம் உணர வேண்டும், டிசம்பர் மாதம் 31-ஆம் நாள் நள்ளிரவில் பன்னிரண்டு மணிகளின் ஓசைக்குப் பிறகு ஒரு புதிய ஆண்டுக்குள் நுழைந்து விடுகிறோம் என்று நம்பிக்கொண்டிருப்பதையும் நாம் ஒரு புதிய சிந்தனையுடன் அணுகுவது அவசியம். கர்த்தருடய வார்த்தையாகிய பரிசுத்த வேதாகமத்தில் இத்தகைய புத்தாண்டு நிகழ்வைப் பற்றி ஒன்றுமே சொல்லப்படுவதில்லை. நம்முடைய ஆராதனை ஜெப புத்தகங்களில் புதிய ஆண்டு என்று ஒரு குறிப்பிட்ட நாளுக்குரிய சுருக்க ஜெபம் என்ற ஒன்று தனியாக இடம் பெற்றிருக்கவில்லை என்பது நினைவில் கொள்ளப்படவேண்டும். கிறிஸ்துவின் விருத்த சேதனத் திருநாள் மட்டுமே நம்முடைய பாரம்பரிய ஆராதனை முறையில் அனுசரிக்கப்பட்டு வந்தது.

கிறிஸ்து பிறப்பின் திருநாள் எப்பொழுது நிகழ்ந்தது என்பதற்குரிய சான்றுகள் பரிசுத்த வேதாகமத்தில் காணப்படவில்லை ஆனால், ஹிப்போலட்டஸ் (கி .பி 170 - 236 என்ற போதகப் பிதா, டிசம்பர் 25ஆம் நாள் கிறிஸ்து பிறப்பின் நாளாக ஆசரிக்கப்பட வேண்டும் என்று நிர்ணயம் செய்தார். தானியேலின் நூலுக்கு அவர் எழுதிய பொழிப்புரையில் இந்த கருத்தை அவர் வெளியிட்டார். திருச்சபை இதனை ஏற்றுக் கொண்டது அன்றிலிருந்து எட்டாம் நாள். (லூக்கா 2 :21) விருத்தசேத நாளாக குறிக்கப்பட்டது.

அப்படியாயின், கிறிஸ்தவப் புத்தாண்டு எப்பொழுது ஆரம்பமாகிறது என்ற வினா எழுகிறது கிறிஸ்துவின் முதலாம் வருகையின் ஞாயிறு நாளாகிய 'அட்வெந்து' திருநாள் இப்புத்தாண்டின் ஆரம்பமாக கொள்ளப்பட வேண்டும் என்ற பாரம்பரியம் எழும்பிற்று. கிறிஸ்துவின் பிறப்பை உபவாசத்தொடும், மனந்திதிரும்புதலுக்கான அழைப்போடும் அணுக வேண்டும் என்ற கண்டிப்பான மரபு போதிக்கப்பட்டது. ஏனெனில், ஆரேலியன் என்ற ரோமப் பேரரசன், ஆதி கிறிஸ்தவர்கள் பெருகி வந்ததை கட்டுப்படுத்த கி.பி 274 ஆம் ஆண்டு டிசம்பர் 25 ஆம் நாள் முதல், சூரியனை

மையப்படுத்தி ஒரு புதிய விழாவினை அறிமுகப்படுத்தினான். கிறிஸ்தவ விசுவாசிகளை சிதறடிக்கவும் முற்பட்டான். இதனை மேற்கொள்ள திருச்சபை நியமித்ததுதான் 'அட்வெந்து' நாட்கள் மனந்திரும்புதலின் பருவமாகிய 'லெந்து' நாட்களுக்கு இணையாக ஊதா வண்ணமே 'அட்வெந்து' நாட்களில் ஆராதனைகளிலும் பின்பற்றப்பட்டது. ஒரு புதிய ஆண்டின் சாட்சியத்தை கிறிஸ்துவின் முதலாம் வருகை மட்டுமே, ஒரு புதிய துவக்கமாக தரவல்லது என்று அறுதியிடப்பட்டது.

ஆகவே கிறிஸ்தவப் புத்தாண்டை, மேற்கத்திய கலாச்சாரம் புகுத்தியுள்ள நாட்கள், மாதங்கள் அடங்கிய ஆண்டுக்கணக்கோடு அணுகுவது அவ்வளவு உகந்தது அல்ல என்பது புலனாக வேண்டும், உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்ற வள்ளுவனின் கண்ணோட்டத்தில், இந்த ஆண்டு கணக்கை நாம் ஏற்றுக் கொண்டிருந்தாலும், நம்முடைய இறையியல் கண்ணோட்டத்தை நாம் ஒரு மீளாய்வுக்கு உட்படுத்துவதில் தவறில்லை. கர்த்தருடைய ஜனமாகிய இஸ்ரவேலின் வரலாற்றிலும், வாழ்விலும் எப்பொழுது புத்தாண்டு ஆரம்பமாயிற்று என்று நினைவு கூறுதல் நமக்கு பயனுள்ளதாக இருக்கும் யாத்திராகமம் 12;2 அவர்களின் வருஷ ஆரம்பத்திற்கு நியமிக்கப்பட்ட கட்டளையை பறைசாற்றுவதைக் காண்கிறோம் அடிமைத்தனத்திலிருந்து மீட்கப் பட்டதின் அற்புதமான அடையாளமாகிய பஸ்கா நிகழ்வே அவர்களுக்கு ஒரு புதிய ஆண்டை உருவாக்கித் தந்தது. வானியல் உருவாக்கித் தந்திருந்த நாட்களையும், மாதங்களையும், வருஷங்களையும் மேற்கொண்ட, கர்த்தரின் கிரியை மட்டுமே அவர்களுக்கு ஒரு புதிய ஆண்டை அர்ப்பணித்து தந்தது கர்த்தருடைய குறுக்கீடு மட்டுமே, அவர் கிறிஸ்துவாக நம் வாழ்வில் தம் வருகையை நிலைப்படுத்தியுள்ளதே புதிய இஸ்ரவேலராகிய நம்முடைய சாட்சியத்தின் புத்தாண்டு சாசனம் கிறிஸ்துவினுடைய வருகை, அவர் மீண்டும் வரும் வரையிலும் நம்மை ஆண்டு கொண்டுள்ள நாட்கள் ஒவ்வொன்றும் ஒரு புதிய ஒப்புவிப்பு என்பதில் தவறில்லை. ஆகவேதான், எபிரேயருக்கு எழுதப்பட்ட மடலில் புத்தாண்டு என்ன என்பதற்கு ஒரு புதிய இலக்கணமே, வரையப்படுகிறதை நாம் மறுத்தல் இயலாது. நீரோ மாறாத வராயிருக்கிறீர் உம்முடைய ஆண்டுகள் முடிந்து போவதில்லை 112:1 சங்கீதக்காரன் வாயிலாக நமக்கு விடுக்கப்படும் விசுவாச சவாலும் (102.27) அதுவே புதிய ஆண்டு, புதிய விடியலையும் புதிய தேடலையும் இச்சவாலின் மூலமே நமக்கு தர இயலும்.

திருச்சபையின் நீண்ட நெடிய வரலாற்றில் இந்த சவாலும், அறைகூவலும் நாளாவட்டத்தில் மறக்கப்பட்டு ஓரங்கட்டப்பட்டதையும் நாம் மறுத்தல் இயலாது வெறும் கும்மாளமும், குதூகலமும் மட்டுமே புத்தாண்டை வரவழைக்கும் அணுகுமுறையாக திருச்சபையின் சடங்குகளாக மாற்றப்பட்டன. இன்றைய ஆலயங்களிலும் புத்தாண்டு வாக்குத்தத்தங்கள் என்ற பெயரில் நடந்து வரும் சடங்குகளும் நம்முடைய கண்டனத்திற்கு உட்பட்டவையே மேனாட்டு கிறிஸ்துவ திருச்சபையில் இத்தகைய தாக்கங்கள்



(1893 -1 ஆம் ஆண்டு, நீலகிரி மாவட்டம், குன்னூரில் எழுப்பப்பட்ட பரிசுத்த யோவான்ஸ்நானகனின் ஆலயத் திருப்பீடம் இது.)

விரவி நின்ற நிலையில் இவைகளைத் திருத்த முயன்றவர். ஜான் வெஸ்லி (1703-91) அவர்கள், ஆங்கிலேய திருச்சபை வரலாற்றில் ஒரு புதிய எழுப்புதலுக்கு வித்திட்ட அவர், புதிய ஆண்டை நினைவு கூற பரிசுத்த வேதாகம உடன்படிக்கையின் நிகழ்வினுக்கு ஒரு புதிய வடிவமைப்பைத் தந்தார். ஜான் வெஸ்லி அவர்களை முன்னோடியாகக் கொண்ட மெத்தோடிஸ்ட்டு திருச்சபையின் உடன்படிக்கை ஆராதனை முறை, இவ்வாறாகவே புத்தாண்டின் பொருத்தனை நிகழ்வாகத் தென்னிந்திய திருச்சபையில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

எனவே புதிய வருடம் புதிய விடியல், புதிய தேடல் ஆகியவை, கர்த்தருடைய ஆண்டுகள் முடிந்து போவதில்லை என்ற புதிய முழக்கத்தின் மூலமே நிறைவேற முடியும் ஆண்டவரே வாரும், மாரநாதா (1கொரி 16 22) என்பதே திருச்சபையின் புதிய முழக்கமாக ஒலித்தது ஒரு புதிய மனந்திரும்புதலுக்கான ஜெபம் இதுவே என்று திருச்சபை விசுவாசித்ததால் மட்டுமே, சுவிசேஷம் அறிவிக்கப்பட்டது. நமக்குத் தேவை அல்லேலூயா குழாம்கள் அல்ல மாரநாதாவின் மறுஉருபமாக்கப்பட்ட உருவங்களாகிய எலியா தீர்க்கதரிசி, யோவான்ஸ்நானகன் போன்றவர்களும் அத்தகையோரின் சாட்சிகளும் மட்டுமே.

ஒரு வியத்தகு முறையில் எலியா தீர்க்கதரிசியையும், யோவான்ஸ்நானகனையும், இயேசு கிறிஸ்துவோடு சித்தரிக்கும் ஆலயத்திருப்பீடம் ஒன்றினை இவ்வெழுத்தாக்கத்தோடு வெளியிடப்படும் ஒளிப்படத்தில் காணவும்.

முனைவர். ஜான்சிபால்ராஜ்,
வன்னியன்குடியிருப்பு

# சரித்திர விடியல்

மனிதகுல சரித்திரத்தில் கி.பி முதலாம் நூற்றாண்டு தான் உலகின் புது விடியல் என்றால் அது மிகையாகாது. இயேசு கிறிஸ்து என்ற இறைமகனின் பிறப்பு அதுவரை இருந்துவந்த மனித நம்பிக்கைகளையும் மனப்பான்மைகளையும் புரட்டிப் போட்டது!

இஸ்ரவேல் தேசத்தின் யூத குலத்தவரான இயேசு, தனது முப்பதாவது வயது முதல் இறைப்போதனைகளில் ஈடுபட்டார். அவரது சமயப் போதனைகள் அனைத்தும் மக்கள் மனத்தைத் தொடுவதாகவும் புரட்சிகரமான முற்போக்கு சிந்தனையுடையதாகவும் இருந்தன. இயேசுவின் கொள்கைகள் யூதர்களின் சமயக் கொள்கைகளுக்கு முரண்பாடானதாக மக்களால் அறியப்பட்டது. ஆனாலும் ஏழை எளியோரை அரவணைக்கும் அன்பின் சாரமாகமைந்திருந்த அவரது ஆன்மீக உரையைக் கேட்கவும் பின்பற்றவும் ஆயிரகணக்கில் மக்கள் திரண்டு சென்றனர். அவர்களுள் பல்வேறு நோயுற்றோரை தனது இறையாற்றலால் அதிசயிக்கத்தக்கதாக சுகப்படுத்தினார்; இறந்து போனவர்களையும் உயிரோடு எழுப்பியிருக்கிறார் என்று அவரது சீடர்களால் விவிலியத்தில் புதிய ஏற்பாட்டு பகுதியின் நற்செய்தி நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இதனெதிரொலியாக நாளுக்குநாள் இயேசுவைப் பின்பற்றும் கூட்டம் பெருகிக் கொண்டே போனது. அப்போது உரோமப் பேராட்சியின் கீழிருந்த யூதர்கள் இயேசுவைப் பின்பற்றும் வெகுஜன கூட்டத்தால் தங்களது ஆட்சிக்கு எதிரான கிளர்ச்சிகள் எழலாம் என்ற எண்ணப் பெருக்கால் அவரை சிலுவை மரத்தில் அறைந்து கொலை செய்தனர். அத்தோடு இப்புதிய மார்க்கம் முடிவுற்றது என்று கருதிய உரோம அரசியலாளர்களுக்கு பேரதிர்ச்சி காத்திருந்தது.!

சிலுவையில் கொல்லப்பட்ட இயேசு மூன்றாவது நாள் உயிருடன் எழுந்து தனது சீடர்களுக்கும் வேறு சிலருக்கும் தாம் உயிரோடு இருப்பதை நிரூபித்ததாக மக்களுக்குள் பரபரப்பான செய்திகள் காட்டுத்தீயாய் பரவின. யூதர்களுக்குள் ஏற்பட்ட இச்சமயத்தின் மாற்று முகம் வினோதமானதாக உரோமானியர்களால் உணரப்பட்டதோடு பலவித அரசியல் அச்சங்களையும் தோற்றுவித்தது. முழு உலகையும் ஆட்சிசெய்யும் புதிய விண்ணரசு இயேசுகிறித்துவின் (மீட்பர், மெசியா) மூலம் வரும் என்ற கிறிஸ்தவர்களின் அசைக்க முடியா நம்பிக்கையும் அதனால் அதைப் பின்பற்றுவோர்கள் தங்கள் இன்னுயிரையும் துச்சமென மதித்து அரசாங்க சட்டங்களையும் மீறி நடந்த விதங்களும் ரோமையர்களின் ஆளுகையின் அடிவேர்களை அசைத்தன. இதனை அடக்க கிறிஸ்தவ கொள்கைகளான, மன்னனேயாகிலும் அவர்களை கடவுளுக்கிணையாக வணங்க மாட்டோம்... உருவாக்கப்பட்ட உருவச் சிலைகளை வழிபட முடியாது என்பனவற்றைக் கடுமையாக எதிர்த்தனர். இவ்விரு கொள்கைகளும் உரோமர்களால் கிறிஸ்தவர்களுக்கு எதிரான பெருங்குற்றங்களாக சுமத்தப்பட்டன. மீறியவர்களைப் பிடித்து சித்திரவதை செய்து கொன்றனர்.

குறிப்பாக கி.பி 64 ல் உரோமப் பேரரசன் நீரோடொமிஷன் ஆட்சிக்காலத்தில் தனது ஆட்சியின் கீழிருந்த நாடுகளெங்குமிருந்த கிறிஸ்தவர்களை மிகக் கொடூரமாக கொன்று குவித்தான். இவனது ஆட்சிக்காலத்தில் தான் ஏராளமானோர் கிறிஸ்தவ மார்க்கத்தை ஏற்க காரணமாயிருந்த பவுல் என்ற மறுபெயர் கொண்ட சவுல் என்பவர் சிரைச்சேதம் செய்யப்பட்டுக் கொல்லப்பட்டார்( கி.பி 67).

கிறிஸ்தவத்தை ஏற்றோரை ஈவு இரக்கமின்றி உடலை பிய்த்தெறிதல், உயிருடன் தோலை உரித்தல், பழுத்த இரும்புத் தகட்டை உடலோடு வைத்தெரித்தல், கழுமரத்தில் ஏற்றுதல், எண்ணெய் ஊற்றி மரத்தோடு கட்டிவைத்து எரித்தல் போன்ற சித்திரவதைகளைச் செய்து கொன்றான். காண்போருக்கு பெரும் பீதியை ஏற்படுத்தி கிறிஸ்தவத்தின் பரவலைத் தடுக்க வேண்டி கொன்ற உடல்களை வீதிகளில் பொதுமக்களின் பார்வையில் தூக்கியெறிந்தான்...!

ரோம் நகரைப் புதியவிதமாக திருத்தியமைக்க விரும்பிய அவன் தானே தனது சகாக்கள் மூலம் அந்நகரை தீக்கிரையாக்கி அந்தப் பழியை கிறிஸ்தவர்கள் மேல் போட்டு பொதுமக்களுக்கு கிறித்தவத்தின் மீது வெறுப்பை ஏற்படுத்தி, அதனிடையே ஒழிந்தபடி குளிர்காய்ந்தான். ஆனாலும் ரோமிலும் கிரேக்கத்திலும் கூட அதிவேகமாக கிறிஸ்தவர்களின் எண்ணிக்கைப் பெருகிக் கொண்டே சென்றது! இயேசுவிற்குப் பிறகு அவரது சீடர்களுள் முதல் பலியான ஸ்தேவான் ( கி.பி 35) முதல் கி.பி மூன்றாம் நூற்றாண்டுவரை கிறிஸ்தவத்திற்காக கொல்லப்பட்டவர்கள் ஆயிரக்கணக்கான அப்பாவி மக்கள் என்று வரலாற்றாசிரியர்கள் தெளிவு படுத்துகின்றனர்.

கி.பி 313 - ல் முதலாம் காண்ஸ்ட்ண்டைன் ( Constantine) என்ற உரோம அரசன் தான் கிறிஸ்தவ சமயத்தை உரோம அரசினால் அங்கீகரிக்கப்பட்ட சமயமாக அறிவித்தான். இதற்கும் கிறிஸ்தவர்களுக்கெதிரான அடக்குமுறைகளும் கொடுங்கோலாட்சியும் தோல்வியுற்று கட்டுப்படுத்த முடியாத அளவில் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கைப் பெருக்கமடைந்ததே காரணமாக இருந்தது. அரசியல் நோக்கோடு எடுக்கப்பட்ட உரோம சாம்ராஜ்ஜியத்தின் இம்முடிவு கிறிஸ்தவர்களின் வேதனைகளுக்கு ஓரளவு முடிவு கட்டியது. இதன்பிறகே மக்களின் அனைத்து தரப்பினரும் கிறிஸ்தவத்தை ஏற்கும் நிலை உண்டானது. யூத சமயத்திலிருந்த எழுத்தளவிலான பழைமையை அறிவார்ந்த நிலையில் இறைவழிபாடு முறைகளைப் பின்பற்றும் கிறிஸ்தவ மார்க்கத்தைப் பின்பற்றுவதை மக்கள் நாகரீகமாக கருதும் காலம் கனிந்தது.

இயேசு பிறந்த காலம் முதல் கிட்டத்தட்ட இரண்டு நூற்றாண்டு காலங்கள் கிறிஸ்தவ சரித்திரத்தின் இருண்ட காலமாக தெரிந்தாலும் இன்று உலகில் கிறிஸ்தவம் அறியப்படாத நாடுகளே இல்லை என்னும் அளவு அதன் வளர்ச்சிக்கு மூலக் காரணம் அந்த ஆரம்பகால இருளின் அடர்வே அடித்தளம் என்றால் மிகையாகாது..!

## சரித்திர தடயங்கள்:

# புதுவிடியல்

நிருபா ஜேசுவடியான்
சென்னை

நூற்றுக்கணக்கான மக்கள் செங்கோட்டை வாசலில் காத்திருந்தனர். பாரத பிரதமர் ஜவஹர்லால் நேரு சுதந்திர உரிமத்தை வாசித்தவுடன், மக்கள் ஆர்ப்பரித்து, அங்கு மிங்குமாக ஓடி தங்கள் சந்தோஷத்தை வெளிப்படுத்தினார்கள். அது வரை காற்றை சுவாசிக்காமல் மடித்து வைக்கப்பட்ட நம் தேசியக்கொடி செங்கோட்டையில் கெம்பீரமாய் ஏற்றப்பட்டது. நம் இராணுவத்தினர் மட்டுமல்லாமல், பட்டி தொட்டியிலிருந்து வந்த மக்கள் கூட, தங்கள் நெஞ்சை நிமிர்த்தி கௌரவத்தோடு தேசியக் கொடியைப் பார்த்து சல்யூட் அடித்தது சரித்திர நிகழ்வாக திகழ்ந்தது. மக்கள், அடிமைத் தனம் அன்றோடு போய் விட்டது என்ற மகிழ்ச்சியில் ஆனந்தம் கொண்டனர். இருநூறு ஆண்டு கால முயற்சிக்குப் பலன் அன்று கிடைத்து விட்ட களிப்பில், மாட்டு வண்டி, சைக்கிள் என எங்கும் தேசியக் கொடியை ஏற்றினார்கள். ஆனால் நம் தேசம் சுதந்திரம் அடைந்ததே தவிர, அடிமைத்தனத்திலிருந்து முற்றிலும் விடுதலை பெறவில்லை. பெண் சிசு கொலை, சதி முறை, ஜாதி கொடுமை, கலவரம் போன்றவற்றால் மக்கள் அடிமைப்பட்டு இருந்தனர். இவற்றிலிருந்து மக்களை விடுவிக்க, தேவன் சில மனிதர்களை நமக்கு தந்தருளினார். இவர்கள் நம்மிடம் காணப்பட்ட அடிமைத்தனம் என்னும் இருளை நீக்கி வெளிச்சத்தை கொண்டு வர அயராது பாடுபட்டனர்.

**ஸ்டான்லி ஜோன்ஸ்:**

உயர் ஜாதி இந்தியர்களுக்கு சுவிசேஷம் அறிவிப்பது என்பது கடினமான ஒன்று. அவர்கள் மத்தியில் ஊழியம் செய்யும் அழைப்பை பெற்ற ஸ்டான்லி ஜோன்ஸ், அவர்களிடம் வித்தியாசமான அணுகு முறைகளுடன் பணியாற்றினார். ஜாதி சமூக வேறுபாடுகளைக் களைந்து அனைவரும் சமமாக வாழ வழி செய்தார். கிறிஸ்தவ ஆசிரமங்களை ஏற்படுத்தி அவற்றின் மூலம் அவர்களை கிறிஸ்துவண்டை நடத்தினார். மகாத்மா காந்தியின் சிறந்த நண்பராகவும் விளங்கினார். இந்தியாவில் 40 வருடங்கள் பணியாற்றிய இவர், உலகம் முழுவதும் பாராட்டப்பட்டார். மிஷினெரி ஸ்தாபனங்களுக்கு மிகச் சிறந்த முன் மாதிரியாக வாழ்ந்து காட்டினார். உயர் ஜாதி மக்களுக்கு சுவிசேஷம் தேவை என்ற பாரம் கொண்டு அவர்களை சந்தித்த முன்னோடி மிஷினெரியாக வாழ்ந்தார்.

**மர்காஷியஸ்:** 1902 ம் ஆண்டு காலரா நோய் திருநெல்வேலியின் நாசரேத்தை தாக்கிய போது, அநேகர் செத்து மடிந்து, அனாதைகளாக்கப்பட்டனர். ஆண்டவர் மட்டுமே குணமாக்க முடியும் என்று அறிந்த மருத்துவ மிஷினெரி மர்காஷியஸ் அவர்கள், மணிக்கணக்காய் மன்றாடி, பதிலையும் பெற்றுதந்தார். மக்கள் மத்தியில் காணப்பட்ட மரணபயத்தையும், மரித்தோரின் ஆவிகளை பற்றிய பயத்தையும் களைந்தார். ஆதரவற்ற பிள்ளைகளுக்காக இல்லத்தை ஆரம்பித்தார். மருத்துவமனையை கட்டி, மருத்துவத்தோடு சுவிசேஷத்தையும் மக்களுக்கு கொடுத்தார். நாசரேத் தபால் அலுவலகத்திற்கு தந்தி வசதியை பெற்றுத் தந்தார். மக்களின் நன்மைகளுக்காக செயல் பட்டதால் 'கைசர் -இ-ஹிந்த்' என்ற விருதை அரசிடமிருந்து பெற்றார்.

**சார்லஸ் மால்ட் & மீட் ஐயர்:**

தென் திருவிதாங்கூர் பகுதிகளில் இயேசுவை ஏற்றுக்கொண்ட குடும்பத்தினரின் பெண்களை, பிராமணர்கள் மற்றும் உயர் ஜாதியினர், இடுப்பிற்கு மேல் அவர்கள் ஆடை அணியவும், தோள் சீலை அணியவும் தடை செய்தனர். இதற்காக மால்ட் ஐயரும், மீட் ஐயரும் அதிகாரிகளுக்கு அடிக்கடி கடிதங்கள் எழுதி, இறுதியில் வெற்றியும் அடைந்தனர். இவர்களுடைய இச்செயல் 1856ல் விதவை மறுமணச்சட்டத்தை அமல்படுத்தியது.

**ஜான் ஆண்டர்சன்:**

ஸ்காட்லாந்து தேசத்திலிருந்து இந்தியாவுக்கு குறிப்பாக சென்னை வந்த ஜான் ஆண்டர்சன், இந்தியர்களின் கல்வி நிலையைக் கண்டு மனம் வருந்தினார். அச்சமயம் இந்தியாவில் ஜாதி பிரச்சினை தலை விரித்து ஆடியது. தாழ்த்தப்பட்டவர்கள் கல்வி கற்க அப்போது அனுமதி இல்லை. சமுதாயம் இவரை எதிர்த்த போதிலும் வேதம் கூறும் அடிப்படை சத்தியத்தை பின் பற்றி, அநேக முடிவுகளை எடுத்தார். ஜாதி, தீண்டாமை இவைகளுக்கு அப்பாற்பட்டவராக வாழ்நதார். கல்வி பயில அனைவருக்கும் சமமான உரிமையைக் கொடுத்தார். இதனால் பல் வேறு ஜாதி மாணவர்கள் ஒன்றாக பயிலவும், சமுதாயம் சீர்திருத்தம் அடையவும் இவர் நிறுவிய சென்னை கிறிஸ்தவ கல்லூரி காரணமாக அமைந்தது. இன்றும் இக்கல்லூரியில் பல்லாயிரக்கணக்கான இளைஞர்கள் பயின்று, தேசத்தை மாற்றும் பெரும் தலைவர்களாக இக்கல்லூரியிலிருந்து புறப்பட்டுச் செல்கின்றனர்.

**வில்லியம் பென்டிங்:**

பிரிட்டிஷ் சிப்பாயாக இருந்த வில்லியம் பென்டிங், 1803லிருந்து 1807 வரை மதராஸின் கவர்னராக இருந்தார். பின்னர் 1828 முதல் 1835 வரை இந்தியாவுக்கே கவர்னர் ஜெனரலாக பதவி வகுத்தார். பெண்களுக்கு எதிரான மூடப்பழக்கவழக்கங்களை வேரோடு பிடுங்கி எறிந்தார். 1829ம் ஆண்டில் சதி, குழந்தை திருமணம் ஆகியவற்றிற்கு முற்றுப்புள்ளிவைக்கும் சட்டத்தை அமலாக்கினார். இவரது வருகை இந்தியாவில் ஒரு புதிய சகாப்தத்தை தோற்று வித்தது என்றே கூறலாம். நீதித்துறை, ஆட்சித்துறை, சமூகம் மற்றும் கல்வி ஆகியவற்றில் நிலையான சீர்திருத்தங்கள் இவர் மூலம் ஏற்பட்டது.

இப்படிப்பட்ட தரிசன புருஷர்களின் பட்டியல் நீண்டு கொண்டே செல்லும். அவர்கள் எடுத்த ஒவ்வொரு முயற்சியும் நிறைவேறியது. இந்திய சரித்திரத்தில் இடம் பெற்றும் உள்ளது. இவையாவும் அவர்கள் பெலத்தினால், முயற்சியினால் அல்ல; அவர்களோடிருந்த தேவன் அவர்களை உந்தி, தள்ளி செயல்பட வைத்தார். நம்மிடமும் தேவ அன்பு தேவ ஆளுகை இருக்கும் போது, நாமும் நம்மைச் சுற்றியுள்ள அடிமைத்தன நுகங்களை முறித்து, புதிய விடியலை நோக்கி நம் ஜனங்களை வழி நடத்த முடியும்.

# வரலாறு திரும்பட்டும்!

மைக்கல்
ஆவணப்பட தயாரிப்பாளர்
திருநெல்வேலி

"பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்" புத்தகத்தை ஒரே மூச்சில் வாசித்து முடித்துவிடலாம் என்றாலும் அது ஏற்படுத்தும் தாக்கம் மூச்சு நிற்கும் வரை தொடரக்கூடியது. "மாதர் மகிழ்ச்சி" என்று ஒரு பெண்களுக்கான பத்திரிக்கை இருந்திருக்கிறது. அதில் வரலாற்றுத் தொடர் ஒன்று வந்திருக்கிறது. அது இப்போது புத்தகமாக இரண்டாம் பதிப்பைக் கண்டிருக்கிறது. பெண்கள் ஓரமாக ஒதுக்கி வைக்கப்படும் உலக வரலாற்றில் பெண்கள் மையத்தில் இருந்து, வெளியே அதிகம் தெரியாமல் செயலாற்றிய பல நிகழ்வுகள் உலக வரலாறு எங்கும் உண்டு. மறைக்கப்பட்டாலும் மறுக்கப்பட்டாலும் பெண்களின் பங்கு என்பது அனைத்து நிலைகளிலும் உலக வரலாற்றில் பாதிக்குப் பாதி உண்டு.

இந்தப் புத்தகத்தைப் படித்த பின் வரலாறு இந்த நிகழ்வுகளில் பாதியாவாவது திரும்பவும் நடந்தால் எத்தனை நன்றாக இருக்கும் என்று மனம் ஏங்கியது. இந்த பன்னிரண்டு பரிசுத்தவாட்டிகளையும் நினைவு கூர்ந்து இவர்கள் பல லட்சம் பரிசுத்தவாட்டிகளாக, வரலாறு திரும்ப ஜெபத்துடன் உங்களுடன் என் எண்ணங்களைப் பகிர்கிறேன்.

சாதாரண மக்கள்:

வரலாற்றில் பல நாயக, நாயகிகள் மட்டுமே நமக்கு அறிமுகம் செய்யப்பட்டாலும் அசாதாரணமானவற்றை மிகச்சாதாரணமாக சாதித்த பல சாதாரணமான மக்கள் உண்டு. அவர்களைப் பற்றி வரலாற்று ஆசிரியர்களும் எழுத்தாளர்களும் எழுதுவது தான் இந்த வரலாற்றை மாற்றுகின்றது - அதை வாசிப்பவர்கள், நடைமுறைப்படுத்துபவர்கள், செயல்படுபவர்கள் மூலம்.

நாயகர்கள், நாயகிகள் தேவை தான். ஆனாலும் சிலருக்கு மட்டும் தேவைக்கு அதிகமாக முக்கியத்துவம் கொடுக்கப்படுவது பல நேரங்களில் வியாபாரமாகிப் போகிறது. கொள்கைகளும் செய்கைகளும் நீர்த்துப் போக காரணமாகின்றது. இந்தப் புத்தகத்தின் நாயகிகள் அனைவருமே உங்களை என்னைப் போன்ற சாதாரணவர்கள். பெண்களுக்கு எப்போதுமே ஓரத்து இருக்கைகள் தான் கிடைக்கும். இந்தப் புத்தகம் போல, பெண்களை மையப்படுத்தி, அவர்களது வாழ்க்கைகள் முன்மாதிரியாக எழுதப்படும் வரலாறு திரும்பட்டும்.




சமாதானம் என்னும் சாதாரணப் பெண்மணி, முக்கூடல் சபையின் முதல் கோதுமை மணி. அவர் இறந்தது எப்படி என்றோ, அவர் கல்லறை எங்கே இருக்கிறது என்றோ தெரியாது என்றாலும், அந்த கோதுமை மணியானது பலன் கொடுத்து, ஒரு பெரும் வயல் விளைந்து அறுவடை நடந்து இப்போது அதன் ஆதாரமாக ஒரு பெரிய ஆலயக்கட்டிடம் நின்று கொண்டிருக்கிறது. ஒரு கூட்ட மக்கள் திருச்சபையாகக் கூடி வருகிறார்கள். இந்த சாதாரணப் பெண்ணின் வாழ்க்கை நமக்கு அசாதாரணமாகத் தெரியக் காரணம், அந்தப் பெண் இயல்பாகச் செய்த பல சிறிய செயல்கள் நம் சபைகளில் இன்று இல்லை என்பது தான்.

சமாதானம் என்ற வயதான கைம்பெண் கிறிஸ்துவின் நற்செய்தியைக் கேட்கக் காரணமாக இருந்தவர்கள் பெரிய மிஷனரிகள் அல்ல. செமினரி என்ற அருட்பணிப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த மாணவர்கள் தாம். இது தான் இந்த சாதாரண மக்களின் அசாதாரணப் பணியின் ஒரு மாதிரி."பிரசங்கித்தவர்கள் போய் விட்டார்கள் அவர்களுக்குத் தெரியாது' அங்கேயொரு பிரசங்கியாரை உருவாக்கி வைத்துவிட்டே போகிறோமென்று!" தான் கண்ட சமாதானத்தை மற்றவர்களிடம் சொல்லாமலிருக்க அவளால் கூடவில்லை. தான் பெற்ற சந்தோஷத்தை அடக்கிக்கொள்ள முடியவில்லை. தான் அனுபவித்த கிறிஸ்துவின் அன்பை வெளியிடாமலிருக்க இயலவில்லை. எனவே வீடுவீடாய்ச் சென்று ஆண்களிடமும், பெண்களிடமும் பேசினாள்.

இன்று ஊழியர்களையும் ஊழியங்களையும் குறை சொல்கின்றவர்களுக்கு சவாலாக இந்த சாதாரண மக்கள் இருக்கின்றார்கள். நாம் தான் ஊழியர்கள், நாம் தான் பிரசங்கியார்கள். பதவி, திறமை எல்லாவற்றையும் விட அர்ப்பணிப்பும், ஆர்வமும் தான் முக்கியம். நம்மிடம் இருக்கும் நற்செய்தியைச் சொல்ல கிணற்றடிகள், திண்ணைகள், சந்தைகளைவிட பல மடங்கு சிறப்பானதாக இப்போது கைபேசிகளும், சமூக ஊடகங்களும் இருக்கின்றன. சமாதானம் மேகம் போன்ற திரளான சாட்சிகளுடன் நம்மைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

ஒரே வருடத்தில் சமாதானத்தின் தனி நபர் ஊழியத்தின் பலனாக ஒரு சிறு கூட்டம் திருச்சபையாகியது. நம் திருச்சபை அங்கத்தினர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் மற்றும் திருமணமாகி வரும் மணப் பெண்கள் தவிர வேறு நபர்களால் பெருகுகிறதா என்று ஒவ்வொரு ஊழியரும், ஒவ்வொரு விசுவாசியும் நிதானமாக, நேர்மையாக சிந்தித்தால் , அந்த சிந்தனையை செயலாக்கினால் வரலாறு திரும்பும். வல்லமையாக.

சமாதானத்தின் சாதனைகள்:

அந்த ஊரின் பண்ணையார் சமாதானம் என்ற பெண்மணியுடன் சண்டை போட்டார். இறுதியில் பண்ணையார் தோற்றார். சமாதானம் நாயகியானார், தான் நாயகி

என்றே தெரியாமல். அல்லது தெரிவிக்கப்படாமல். தொலைபேசி கூட இல்லாத அந்தக்காலத்து நாயகி செல்ஃபி நாயகிகளுக்கு ஒரு சவால் தான். வளர்ச்சியுடன் பிரச்சனைகளும் தொற்றிக் கொள்ளும் என்பது நிரூபணமும் உதாரணங்களும் தேவையில்லாத உண்மை. ஆனால் கிறிஸ்துவைப் பின்பற்றுவதால் வரும் பாடுகள் நமக்கு நல்லது. ஆனால் கிறிஸ்துவைப் பின்பற்றுவதாகச் சொல்லிக் கொண்டு கிறிஸ்தவர்களுக்குள் ஏற்படும் பிரச்சனைகள் தான் இன்றைய உண்மையாக இருக்கிறது.

ஒரே வருடத்தில் பெருகிய சபையாரின் எண்ணிக்கையைப் போலவே பிறரிடமிருந்து வந்த பாடுகளும் பெருகின. “சகிக்க வொண்ணாத்துன்பமுண்டாயிற்று. ஈடுகொடுக்க முடியாமல் முதலில் இரண்டொருவர் பின் வாங்கினர் அதைக் கண்ட சிலர் மறுதலித்தார்கள் சிலர் இதையறிந்ததும் தம் விசுவாசத்தைப் புறக்கணித்தனர். இறுதியில் எல்லாருமே போய்விட்டனர் நம் முதியவளைத் தவிர!”

“ஈராண்டுகள் ஓடி மறைந்தன அந்த நாட்களனைத்திலும் முக்கூடலின் ‘சுவிசேஷத் திருச்சபைக் கிறிஸ்தவ விசுவாசி’ அவள் ஒருத்தி மட்டுமே. கர்த்தருடைய நாளை ஆசரிப்பதில் அவளுக்கு நிகர் அவளே. ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் சீவலசமுத்த்திரதுக்கு நடந்து போய், ஆராதனையில் பங்கு பெற்று, கர்த்தரைத் துதித்து, மகிழ்ந்து திரும்புவதை வழக்கமாகக் கொண்டாள். அதில் அவள் தவறுவதில்லை. மூன்று மாதங்களுக்கொரு ஞாயிறில் பாளையங்கோட்டைக்குப் போய் ஆராதனையில் கலந்து, மனம் நிறைந்தவளாய் திரும்புவதையும் ஒழுங்காகக் கடைப்பிடித்தாள்.”

வெளுப்பவருக்கு வெளுக்கு சாதி வண்ணார் என்பது போல, ஊழியர்களாக இருந்த மிஷனரிகளுக்கே ஆன்மீக சவாலும், உற்சாகமும் கொடுத்து ஊழியர்களுக்கே ஊழியம் செய்தார் இந்த சாதாரண நாயகி. விசுவாசிகளுக்கு மாதிரியாய் இரு என்று தீமோத்தேயு என்னும் இளைஞனுக்கு பவுல் சொன்ன உபதேசம் நம் சபையார் ஒவ்வொருவருக்கும் பொருந்தக்கூடியது. சாதாரண விசுவாசிகள் தான் போதகர்களுக்கும், முழு நேர ஊழியர்ளுக்கும் உற்சாகம் கொடுக்கக் கூடியவர்கள். வரலாறு திரும்ப வேண்டும் என்றால், உற்சாகம் இல்லாமலோ, எதிர்ப்புகளுடனோ இருக்கும் ஊழியர்களுக்கு நம்விசுவாசிகள் உற்சாகம்தரும் அளவில் இருக்க வேண்டும். ஆன்மீகத்தில் சிறந்திருக்க வேண்டியது ஒவ்வொரு விசுவாசியும் தான். ஊழியர்கள் அடிப்படையில் ஒரு விசுவாசிகள்தான். அப்படியே விசுவாசிகள் ஒவ்வொருவரும் ஒரு ஊழியரே. “நானும் அம்மாளும் அவளுடன் பேசிக் கொண்டிருக்கும் போது அவளுடைய சம்பாஷணை எங்களுடைய ஆத்துமாக்களுக்குப் பயனளிப்பதாயிருந்தது. இயேசுநாதரையும் அவருடைய அன்பையும், நமக்காக அவர் செய்த தியாகத்தையும், விசுவாசிகளுக்கு அவர் அருளுகிற சந்தோஷத்தையும் சமாதானத்தையும் பற்றியே பேசுவாளேயன்றி வேறொன்றும் பேசமாட்டாள்,” என்று ஷாப்ற்றர் ஐயர் எழுதுகிறார் (2.12. 1832).”

“அந்த ஒரே ஒருத்தியால் என்ன செய்து விட முடியுமென்று எண்ணினார்கள் ஆகையினால் தான் அவர்கள் அவளைத் துன்புறுத்துவதை விட்டோய்ந்தனர்.” ஆனால், பாவம் புளித்தமா பற்றிய உவமையை அவர்கள் நினைத்துப் பார்க்கவில்லை. கிறிஸ்தவன் புளித்தமாவையும் உப்பையும் ஒளியையும் போன்றவனென்பதை அவர்கள் தெரிந்திருக்க நியாயமில்லை தான். சமாதானம் புளித்தமாவானாள். மறுதலித்துப் போனவர்களை ஒவ்வொருவராக சந்தித்து பேசினாள். நயமும் பயமுமாய் புத்திசொன்னாள். “முதலாவது, அவளைப் போன்ற கைம்பெண்ணொருத்தி விசுவாசத்திற்குள் வந்தாள். அவளும் சமாதானத்தைப் போலவே தெய்வபக்தியிலும் கிறிஸ்தவப் பண்பிலும் விரைவில் வளர்ந்து, மற்றவர்களுக்கு முன் மாதிரியாக வாழ்ந்தாள். “மறுதலித்தவர்கள் மனந்திரும்பினார்கள்.” அவள் அவர்களுக்குத் தாயானாள் குழந்தைகளுக்கு உபதேசிப்பது போல உபதேசித்தாள்; போதித்தாள்; கர்த்தரண்டை வழி நடத்தினாள், பின் ஒருநாள் ரேனியஸ் ஐயரிடம் ஓடினாள். ஐயரும் அம்மாளும் அடைந்த சந்தோஷத்துக்கு அளவேது! ஷாப்ற்றர் ஐயரும் அம்மாளும் அச்செய்தி கேட்டு, உள்ளம் பூரித்தனர் ரேனியஸும் ஷாப்வற்றம் கர்த்தரை ஸ்தோத்திரித்து சமாதானத்தையும் பாராட்டினர். அன்றே சமாதானம் என்ற பெயருடன் அவளுக்கு ஞானஸ்நானம் கொடுத்து விடையளித்து அனுப்பினர் (2-12-1832).

சமாதானத்தின் ஆதரவில் முக்கூடல் சபை வளர்ந்தது. பத்துப் பேர் அறுபது பேராகப்பெருகி



விட்டனர்.

ஷாப்ற்றர் ஐயர் நல்லூரில் மிஷனெரியாயிருந்த படியால் அச்சபையை அடிக்கடி சந்தித்து ஆதரித்துப் பராமரித்து வந்தார்.

கவனித்தீர்களா? இங்கே தான் வெளிநாட்டு ஊழியரே காட்சிக்குள் வருகிறார். வெளிநாட்டு சமயம் என்று தவறாக கிறிஸ்தவம் குறை சொல்லப்படுவதற்கு ஒரு காரணம், இப்படிப்பட்ட சாதாரண நாயக, நாயகிகள் பற்றிய விபரங்கள் மறந்தோ, மறைந்தோ போனது தான். அப்படியே மிஷனரிகளின் கதைகளை மட்டுமே ஊதிப்பெரிதாக்கி சொல்லிக்கொண்டிருப்பது தான். மிஷனரிகள் நம் சாதா நாயகர்களைப் பற்றி வியந்து எழுதி வைத்திருக்க, நாமோ மிஷனரிகளின் வாழ்க்கைகளை மட்டுமே சிலாகித்துக் கொண்டிருக்கிறோம்.

‘இந்தச் சபைக்கு வரும் போதெல்லாம் ஏதாவது ஒரு விதத்திலாவது உற்சாகம் கொள்ளாமல் நான் திரும்பிச் சென்றதில்லை. இச்சபையின் அஸ்திபாரம் மிகுந்த பெலனுள்ளது என்பதற்குப் பலத்த சான்றுகளுண்டு’ என்று அவர் எழுதுகிறார் (Journal dated 1-6-1849). சமாதானத்தைப் பற்றி நமக்குக்கிடைத்துள்ள கடைசிக் குறிப்பு 1849 ஜுன் 1ம்தேதி நாட்குறிப்பில் ஷாப்ற்றர்ஐயர் எழுதிய கீழ்க்கண்ட வசனமே: ”சமாதானத்துக்கு இப்போது வயது எழுபது ஆனாலும் அவளுடைய விசுவாசம் பெலனுள்ளதாயிருக்கிறது.

இந்த கிராமத்தில் சுவிசேஷம் பெற்றிருக்கிற வெற்றியைக் குறித்துக் களிகூர்கிறாள். இன்னமும் அநேகர் இச்சிறிய மந்தையில் சேருவார்கள் என்ற தன்னுடைய நம்பிக்கையை எப்பொழுதும் என்னிடம் சொல்கிறாள்".

நம்மால் மிஷனரிகளைப் போல வாழவோ, பணி செய்யவோ முடியாது. இந்தக் காலமும் சூழலும் மாறிவிட்டது. ஆனால் சமாதானம் போன்றவர்களின் வாழ்க்கை முறைகளையும், சமூக, ஆன்மீகப் பணிகளையும் அப்படியே பின்பற்ற முடியும். அப்போது வரலாறு திரும்பும்.

---





# பிறவா இறை பிறத்தலும் மகிழ்ச்சி

அருள்திரு. இலாசரஸ் செல்வநாதன்
காட்பாடி

இறவா இறை இறத்தலும் மகிழ்ச்சி (கிறிஸ்தவர்க்கே)
தானே தண்டித்துணரும் பாவிகள் குறைவே
பிறர் தண்டித்துணரும் பாவிகள் அதிகம்
தன்னைத்தானே மன்னிக்கும் பாவிகள் அதிகம்
பிறரால் மன்னிக்கப்படும் பாவிகள் குறைவே
பிறரை மன்னிக்கும் பொய் செபம் அதிகம் (மத்.6:11)
எவர் பாவமும் மன்னிக்க எவராலுமாக! (மாற்.2:7)
மனிதனே மனிதன் பாவம் மன்னிக்கலாக!
இறைவனே மனித பாவத்தை மன்னிக்கலாகும் (1தீமோ.1:15)
இறையே நரவேட மேற்றார் பெத்தலையில்
தேவையற்றவை தேடுதலை விட்டு
தேவனின் மன்னிப்பைத் தேடிடு!
நன்மையை சேர்ப்பதல்ல
தீமையை விடுவதே நன்மை!
புத்தாண்டு செல்லும் வழி மன்னிப்பே!
புத்துலகு செல்லும் வழியு மன்னிப்பே!
என்னை மன்னிப்பதே இயேசுவின் மகிழ்ச்சி.

---

2020 டிசம்பர் 7 ம் தேதி திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் பத்து அம்ச செயல் திட்டங்களின் ஒன்றான பழைய புத்தகங்களை மறுபதிப்பு செய்வது அதில் ஒரு புத்தகமாக பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்கள் எழுதிய "**பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்**" புத்தகத்தை வெளியிட பராபரன் சித்தம் கொண்டார். இணைய வழியாக நடைபெற்ற விழாவில் டாக்டர். சாமுவேல் வசுந்தரன் சீனிவாசகம் ஐயா அவர்கள் தலைமையில் தலைமை உரையுடன் மிக சிறப்பாக நடைபெற்றது. அருள்திரு.H ஜான் சாமுவேல் ஐயா அவர்கள் ஜெபித்து ஆரப்பித்து வைத்தார்கள். தொடர்ந்து பேராசிரியர் M தாமஸ் தங்கராஜ் ஐயா மற்றும் பேராசிரியர் M மைக்கேல் பாரடே சிறப்புரையாற்றினார்கள். நூல் அறிமுக உரையாக திரு S அற்புதராஜ் அவர்களும், நூல் ஆசிரியர் உரையாக ஆவணப்பட இயக்குனர் மைக்கேல் அவர்களும் உரையாற்றினார்கள். "**பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்**" புத்தகத்தை திரு கிங்ஸ்லி மோசஸ் ஜேசுதாஸ் அவர்கள் வெளியிட திரு V டேனியல் மோகன்ராஜ் அவர்கள் பெற்றுக்கொண்டார்கள் விழாவில் மோரியா பேராசிரியர். ஜான் ஜெயானந்தம் ஐயா, பேராசிரியர் சுரேஷ் ராஜன், அருள்திரு இர்வின் ஞானமுத்து, வரலாற்று சங்க மன்னா செல்வகுமார் மற்றும் சுஜித் கலந்து கொண்ட அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்கள்.

தூத்துக்குடி நாசரேத் திருமண்டலம் தாவீது சுந்தரானந்தன் சபை மன்ற தலைவர் மற்றும் தூய மிகாவேல் முதலான சகல சம்மனசுகளின் ஆலயம், முதலூர் சேகர தலைவருமான அன்பு அண்ணன் அருள்திரு P ஏசுவடியான் துரைசாமி ஐயா அவர்களிடம் நம்முடைய வரலாற்று சுவடுகள் மாத இதழை அறிமுகப்படுத்தி பொழுது பேராசிரியர் D.A கிறிஸ்துதாஸ் ஐயா எழுதிய "**பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்**" (மறுபதிப்பு) என்ற புத்தகத்தை முதலூர் திருச்சபையில் அறிமுகம் செய்து வைத்தார்கள். உடன் முதலூர் திருச்சபையில் நமக்கு அனைத்து உதவிகளையும் செய்து கொடுத்த நம்முடைய வரலாற்று சங்க உறுப்பினர் அபிஷேக் அவர்கள் சங்கத்தின் சார்பாக ஐயா அவர்களுக்கும் திருச்சபை மக்களுக்கும் நன்றியை தெரிவித்துக்கொள்கின்றோம்.

தூத்துக்குடி நாசரேத் திருமண்டலம் பண்டாரசெட்டிவிளை சேகர தலைவர் அருள்திரு H ஜான் சாமுவேல் ஐயா அவர்களிடம் பேராசிரியர் D.A கிறிஸ்துதாஸ் ஐயா எழுதிய "**பரிசுத்தவாட்டிகள் பன்னிருவர்**" (மறுபதிப்பு) புத்தகத்தை கொடுத்தோம் அவர்கள் பண்டாரசெட்டிவிளை திருச்சபையில் அறிமுகம் செய்து வைத்தார்கள். நம்முடைய வரலாற்று சங்கத்தின் சார்பாக ஐயா அவர்களுக்கும் திருச்சபை மக்களுக்கு நன்றியை தெரிவித்துக்கொள்கின்றோம்.









# ஜேக்கப் கணக்க

அருட்திரு.பேராசிரியர். மா. தேவராஜ்
நீலகிரி



## முதல் அருட்பொழிவுப் பெற்ற படுக ஆயர் மற்றும் படுக இலக்கியவாணர் மானவர்

கடந்த மாத தொடர்ச்சி ..

அருட்திரு. ஜேக்கப் கணக்கா அவர்கள் பலப் பாடல்களை இயற்றி இசையமைத்துள்ளார் , ஆனால் அவைகள் ஏனோ மக்கள் பயன் பாட்டில் இல்லாமல் போனதாலோ என்னவோ அவைகளில் ஒன்றும் இன்றைக்கு (குடும்பத்தில் உள்ளவர்கள் உட்பட) யாருக்கும் தெரியாது. ஆனால் அவரது ஒரு பாடலின் ஒரு அடிமட்டும்,

*"ஆறு கோலு கட்டிலேனா?*
*அக்கி ஆக்கி ஆடிலேனா?*
*மூறுக் கோலு கட்டிலேனா?*
*மண்டெ கூட்டி அத்தலேனா?*
*பாப்ப நெஞ்சு திருகதோலெ*
*பரிசுத்தவு ஆப்பதில்லெ"*

படுகர்களின் சாவில் தேர் செய்வார்கள். அதில் "ஆறுக் கோலு" என்பது மிகவும் உயர்ந்த கோபுர தேர். இப் பாடலின் தமிழாக்கம்

'ஆறு கோல்களால் தேர் கட்டி பயனென்ன?

வாய்கரிசி போட்டு நடனமாடி பயனென்ன? மூன்று கோலால் தேர் கட்டி பயனென்ன? ஒப்பாரி வைத்து அழுவதால் பயனென்ன? பாவம் மனம்திரும்புவதில்லை "பரிசுத்தமும் அடைவதில்லை" என்பதாகும். ஆயரவர்கள் 1852 ம் ஆண்டு மேதகு ஜார்ஜ் காசமேஜர் அவர்கள் மொழி பெயர்த்த தூய லூக்கா நற்செய்தி நூலினை 1887ம் ஆண்டு அருட்திரு. கிறிஸ்தியான் வில்லியம் லூட்ஸ் அவர்கள் திருத்தி மொழிப் பெயர்த்தப் போது அம் மொழி பெயர்ப்பில் பெரிதும் உதவியாக இருந்தார்.

மேலும் 1902ம் ஆண்டு "யோனா தீர்க்கரின் நூலினை படுகு மொழியில் தமிழ் மற்றும் கன்னட எழுத்துருக்களைப் பயன் படுத்தி மொழி பெயர்த்தார். இந்நூல் பாசல் அருட்பணி சங்கத்தின் வாயிலாக அச்சிட்டு வெளியிட்டார். இந்நூல் ஒரு பக்கம் தமிழ் எழுத்துருவும் மறுப்பக்கம் கன்னட எழுத்துருக்களை கொண்டது.

அருட்திரு ஜேக்கப் கணக்கா அவர்கள் 35 பக்கங்கள் கொண்ட வேதாகம சிறு கதை தொகுப்பு ஒன்றினையும் கன்னட எழுத்துருக்களைப் பயன்படுத்தி எழுதினார், அதனை 1902 ஆம் ஆண்டு மங்களூர் பாசல் அருட்பணி அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடார்.

1909 ம் ஆண்டு ஓய்வு பெற்றார். திருப்பணி நிறுவனங்கள் அவருக்கு ஓய்வுக் கொடுத்தாலும் ஆண்டவர் திருப் பணிக்கு ஓய்வு கொடுப்பதில்லை. பணிமூப்பு ஓய்வுக்குப் பின் அருட்திரு ஜேக்கப் கணக்கா அவர்கள் சி.எம்.எஸ் ஆங்கிலிக்கன் திருச்சபையின் தமிழ் திருச்சபையின் கௌரவ ஆயராக தமது மரண காலம் வரைக்கும் திருப்பணியாற்றினார். இவர் தமது 74வது வயதில் 1921 ஆம் ஆண்டு தம்மை மீட்டு இரட்சித்து மிக உயரியப் பதவியான இறைப் பணியினையளித்த பரம பிதாவின் மடியில் இளைப்பாறும் படி மறுமைக்குள் பிரவேசித்தார்.



## தரங்கம்பாடி மிஷன்

***1705 - ல் டென்மார்க் அரசன் பிர டெரிக்கே இதன் ஸ்தாபகர் எனலாம். சுமார் 60 மிஷனெரிகள் அனுப்பப்பட்டார்கள். இந்தியாவுக்கு வந்த முதல் புராட்டஸ்டண்ட் மிஷனெரி சீகன் பால்கு***



# தமிழகத்தில் தங்கள் தாத்தாவின் வரலாற்றுச் சுவடுகளைத் தேடி வந்த பேத்தி மற்றும் பேரன்

ஜே.பர்னபாஸ்
சேலம் வரலாற்றுச் சங்கம்

- ஒரு வியப்பான சரித்திர தேடல்

தனது கொள்ளு தாத்தாவின் சாதனைப் பணிகளைத் தேடிவரும் இளைஞன்:

இங்கிலாந்து தேசத்திலுள்ள டெர்பிசையர் (Derbyshire)என்ற ஊரிலிருந்து தனது பெற்றோருடன் 30-3-2008 அன்று சேலம் வந்த திரு ஜோ விட்னி (Joseph Witney )(19) பிரிட்டீஷ் ஆட்சிக் காலத்தில் சேலம் மற்றும் ஈரோடு பகுதிகளில் கிறித்தவ இறைப் பணியாற்றி வந்த சங்கை வீ.ஏீ.விட்னி ஐயர் (Rev.T.C.Witney.L.M.S.சேவைக் காலம் -1910-1952) என்பவரின் கொள்ளு பேரன் ஆவார். இவர் சேலம் வரலாற்றுச் சங்கத்தாராகிய எங்களுடன் தொடர்பு கொண்டு தனது கொள்ளு தாத்தாவின் கல்லறை எங்கு இருக்கிறது என்ற தேடலில் ஈடுபட்டார். ஆனால் இதற்கான விடை கிடைக்க 12 ஆண்டுகள் அந்த குடும்பத்தார் காத்திருக்க வேண்டும் என்பதை அப்பொழுது அவர் உணர்ந்திருக்கவில்லை. எங்களிடம் இருந்த தகவல்களின் அடிப்படையில் சங்கை T.C.விட்னி ஐயரின் கல்லறை திருநெல்வேலியில் (தற்போது தூத்துக்குடி -நாசரேத் ஊரில்) இருப்பதை அப்பொழுது தெரிவித்தோம். இருந்தாலும் அவர்களின் தேடலில் சங்கை.T.C.விட்னி ஐயரின் கல்லறையை தரிசிக்க முடியாமலே அவர்கள் தாய்நாடு திரும்பினர்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் சேலம், ஈரோடு, மற்றும் திருநெல்வேலி ஆகிய பகுதிகளில் 1910 முதல் 1952 வரை லண்டன் மிஷனெரி சங்கம் சார்பாக வந்து கிறிஸ்தவ இறைப் பணியும்,கல்விப் பணியும் செய்து வந்தவர்தான் சங்கை T.C.விட்னி ஐயர் ஆவார்.இவரது மனைவி திருமதி.மைபான்வி ரீஸ் விட்னி ஈரோட்டில் உள்ள தற்போதைய CSI கோஷா மருத்துவமனையில் அந்த காலத்தில் மருத்துவராக பணியாற்றினார். சங்கை.T.C.விட்னி ஐயர் சேலத்தில் லண்டன் மிஷன் பள்ளிகளின் மேலாளராகவும், இன்றைய சேலம் CSI லெக்லர் நினைவாலயத்தில் அந்த காலத்தில் குருவானவராகவும் இருந்துள்ளார். தூத்துக்குடியில் திருமறையூர் என்ற இடத்தில் அப்பொழுது உருவாக்கப்பட்டிருந்த வேதசாஸ்திரக் கல்லூரியின் முதல்வராக பணியேற்று சிறப்பாக கடமையாற்றி வந்த நிலையில் 1952 ஆம் ஆண்டு மரணமடைந்து, தூத்துக்குடி நாசரேத் கல்லறைத் தோட்டத்தில் அடக்கம் செய்யப்பட்டார்.

ஒரு நூற்றாண்டிற்கும் மேலாக காலங்கள் கடந்த இந்த நிலையில் இங்கிலாந்து தேசத்தில் வாழ்ந்திருக்கும் சங்கை.T.C.விட்னி ஐயரின் பேத்தி திருமதி.பென்னி ரிலி சுமித் (Mrs.Penny Riley Smith -66 ) மற்றும் பேரன் திரு.சைமன் விட்னி (Mr.Simon Witney -63 )ஆகியோர் தங்கள் தாத்தா சங்கை T.C.விட்னியின் வரலாற்றுச் சுவடுகளைத் தேடி ஆன்மீக சுற்றுலாவாக கடந்த 2020ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 14,15,16,17,18,ஆகிய நாட்களில் ஈரோடு சேலம், தொடர்ந்து திருநெல்வேலி பகுதியிலும் சுற்றுப் பயணம் மேற்கொள்ள தமிழகம் வந்தனர். ஈரோடு, சேலம் பகுதிகளில் சங்கை T.C.விட்னி ஐயர் வாழ்ந்த, பணிசெய்த இடங்களை பார்வையிட்டு வரலாறுகளை சேகரித்துக் கொண்ட அக்காவும், தம்பியும் விட்னி ஐயரின் கல்லறையைத் தேடும் தேடலைத் திருநெல்வேலியை நோக்கி துவக்கினர்.

திரும்பிப்பார்க்கின்ற தருணம்:

இந்த குடும்பத்தினர் ஏற்கெனவே கடந்த 2008ல் மேற்கொண்ட இந்த முயற்சி யையும்,அப்பொழுது நம்மைத் தொடர்பு கொண்ட திரு.ஜோ விட்னி என்ற இளைஞனின் தேடலையும் நாம் இந்த கட்டுரையில் 4 ஆவது தலைப்பில் கொடுத்துள்ளோம்.

மூன்று ஆண்டுகளுக்கு முன் தனது தாத்தாவின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி சேலம் வந்த பேத்தி

ஒரு Flash back கடந்த 2017 ஆம் ஆண்டு ஜனவரி மாதம்10,11,12 ஆகிய தேதியில் சங்கை T.C.விட்னி ஐயரின் பேத்தி திருமதி.பென்னி ரிலி சுமித் சேலம் மற்றும் ஈரோடு பகுதிகளில் தனது தாத்தாவின் வரலாற்றுச் சுவடுகளைத் தேடி வந்ததும், ஒரு விரிவான தேடலுக்கு பின்னர் திரும்பிச் செல்லும் நிலையில் அவர் மீண்டும் தனது தம்பியை இங்கே அழைத்து வருவேன் என்று அவர் சொல்லிச் சென்றதும் இவர்கள் மற்றும் எங்களுக்குமான நட்பு, உறவாக பலப்பட்டது.

2020 ஆம் ஆண்டு பிப்ரவரி 19ஆம் நாள் இந்த முறை அங்கு திருநெல்வேலியில் புதிய புரட்சியாக உருவாகியிருந்த **திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** எங்கள் வேண்டுகோளை ஏற்று இந்த அவர்களின் தேடலுக்கு மிகவும் உதவிக்கரமாக இருந்து தூத்துக்குடி, நாசரேத்து, பகுதிகளில் ஒரு மிகப்பெரிய தேடலை, தங்கள் உறுப்பினர்கள் மற்றும் ஆர்வலர்கள் துணையுடன் முன்னெடுத்து, ஐயரின் கல்லறை நாசரேத்து கதீட்ரல் தேவாலய கல்லறைத் தோட்டத்தில் இருக்க கண்டறிந்தது ஒரு மகத்தான சாதனை. திருமதி.பென்னி ரிலி சுமித் மற்றும் திரு.சைமன் விட்னி ஆகியோர் தங்கள் தாத்தாவின் கல்லறையை தரிசித்த மகிழ்ச்சியில் அங்கே அவரது நினைவிற்கு மலரஞ்சலி செலுத்தியது திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்திற்கும், சேலம் வரலாற்றுச் சங்கத்திற்கும் இது மிகுந்த மகிழ்வை தந்த தருணம் எனலாம்.





# வச்சிரமணி கிறிஸ்தியான் வழிவந்த செந்தமிழ் புலவர் மூவர்

பேராசிரியர் ந. ஜான் ஜெயானந்தம்
சென்னை

*கடந்த பதிவின் தொடர்ச்சி..*

**வச்சிரமணி கிறிஸ்தியான் (1835-1910)**

செம்புலிங்கத்தின் இளைய மகன் வச்சிரமணி என்பார் 1835 - ஆம் ஆண்டு பிறந்தார். அவர் சிறந்த கல்வி அறிவும், நற்பண்பும், ஆன்மீக வாஞ்சையும் உடையவராக இருந்தார். அவர் செல்வந்தராகவும், ஊர் மக்களிடையே நல்மதிப்பும் மரியாதையும் உடையவராகவும் வாழ்ந்து வந்தார். அவர் தமது குலக்கோவிலில் பூசாரியாகவும் பணியாற்றி வந்தார்.

அக்காலத்தில் ஆங்கிலேய மிஷனெரிகள் இடையன்குடியில் கல்விச் சாலைகளை நிறுவி, கிறிஸ்தவ இறை பணியாற்றி வந்தனர். இவர்களுடன் வச்சிரமணியாருக்குத் தொடர்பு இருந்திருக்கக் கூடுமென ஊகிக்க முடியும். அந்நாட்களில் யோசேப்பின் சரித்திரத்தின் மூலம் அறிவிக்கப்பட்ட சுவிசேஷ நற்செய்தியைக் கேட்டு, தன் பாவங்களை உணர்ந்து, மனமாற்றம் பெற்றவராகிக் குணப்பட்டு, வச்சிரமணி அவர்கள் ஒரு மெய்க் கிறித்தவரானார். யோசேப்பின், மேல் இவருக்கு ஏற்பட்ட பற்று, மற்றும் நன்மதிப்பு காணரணமாகத்தான் இவர்ம தம் இளைய மகனுக்குப் "பன்னேயா" என்ற பெயரைச் சூட்டினார் போலும். பன்னேயா என்றார் 'இரட்சகர்' எனப் பொருள். இதுவே எகிப்தின் அரசனாகிய பார்வோன், யோசேப்புக்கு இட்ட மறுபெயராகும். (சாப்நாத் பன்னேயா என்பதன் பொருள் 'ஜெகத்து இரட்சகன்' என்பதாம் ஆதி. 41:45) பாரம்பரிய இந்து மத நம்பிக்கையில் ஆழ்ந்த மற்றும், வைராக்கியமும் கொண்டு, கோயில் பூசாரியாகவும், பெரும் செல்வந்தராகவும் தம் மக்கள் மத்தியில் செல்வாக்கு உடையவராகவும் வாழ்ந்து வந்த இவர், கிறித்தவராக மாறினது ஏதோ உலக ஆதாயத்திற்காகவோ, பெயருக்காகவோ, மிஷனெரிகளின் பலவந்தத்திற்காகவோ அன்று என்பது வெளிப்படை. அவரது வாழ்க்கையே இதை உறுதிப்படுத்தியுள்ளது. ஆத்துமப் பசியுடையவராயிருந்த அவர், ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் நற்செய்தியின் வாயிலாகப் பாவமன்னிப்பையும் இரட்சிப்பையும் பெற்றுத் தம் ஆன்மீக ஏக்கமும் தாகமும் தீர்க்கப்பட்டவராகக் கிறித்துவின் உண்மைச் சீடரும் தொண்டருமானார்.

ஜான் பனியன் இயற்றிய மாற்றுருவகக் (allegory) காப்பியமாகிய 'மோட்சப் பிரயாணம் ஆங்கிலத்தில் 1773-ஆம் ஆண்டு வெளியாகி, உலகம் முழுவதும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. இது 1853-இல் தமிழாக்கம் பெற்று, ஐரோப்பிய மிஷனரிகளால் மந்திர விளக்குப் படக்காட்சியாகப் பட்டித் தொட்டிகளிலெல்லாம் காட்டப்பட்டது. பின்னரே 1882 இல் அது சாமுவேல் பவுல் ஐயர் அவர்களால் தமிழ் உரைநடையாக மொழி பெயர்க்கப்பட்டது. பல தேவ தேவதைகளுக்குப் பூசாரியாக இருந்து வந்த வச்சிரமணி, இயேசு கிறிஸ்துவின் ஜீவ ஒளியைப் பெற்றுத் தம் மோட்சப் பயணத்தைத் துவக்கியபோது தம் இயற்பெயருடன் 'கிறிஸ்தியான்' என்ற நற்பெயரையும் இணைத்துக் கொண்டதில் வியப்பேதும் இல்லை. இது அவர் கிறிஸ்துவின்பாற் கொண்டிருந்த பற்றினை எடுத்துக்காட்டுகிறது. இவ்வாறு அவர் "வச்சிரமணி கிறிஸ்தியான்' என்ற பெயரால் அறியப்பட்டார்.

தாம் இயேசு கிறிஸ்துவின் மூலம் பெற்ற ஞானப்பேரொளியைத் தம் குடும்பத்தினருக்கும், ஊராருக்கும் எவ்வகையிலும் அறிவித்துப் பரம இரட்சிப்பை அவர்களும் பெற்றடைய வேண்டுமென விரும்பிய அவர், தம்முடைய சொந்த நிலத்தில் உள்ள புளியந்தோப்பில் சிறிய பள்ளிக்கூடம் ஒன்றை நிறுவினார். தம் உறவினர், மற்றும் ஊரில் உள்ள ஏனையப் பிள்ளைகளைக் கூட்டிச் சேர்த்துப் பனை ஓலைகளில் எண் சுவடியும், அரிச்சுவடியும் எழுதிக் கல்வி கற்பித்தும், இறை நற்செய்தி பற்றிய ஆன்மீகப் போதனைகளைப் புகட்டியும் வந்தார். இவ்வாறு பிள்ளைகள் கல்வி ஞானத்தில் தேறினதுமன்றி இறைவனாம் கிறித்துவைப் பற்றிய பாடல்கள், ஜெபங்கள் ஆகியவற்றையும் கற்று, ஆன்மீக அறிவிலும் வளர்ந்தனர். முற்றும் இந்துக்களாக இருந்த அவ்வூர் மக்கள், வச்சிரமணி என்ற கிறிஸ்தியான் தங்கள் சுற்றத்தார் புறத்தார் அனைவரையும் கிறித்தவராக்கி விடுவாரோ எனப் பயந்து, அவருக்கும் அவருடைய குடும்பத்தினருக்கும் அதிகத் துன்பம் விளைவித்து, தொல்லை கொடுத்து வந்தனர். அவருடைய இனத்தார் அவருக்கு இழைத்த துன்பமும் நிந்தையும் பொறுக்கக்கூடாது போகவே, இவர் தம் குடும்பத்துடன் உசரத்துக் குடியிருப்பிலிருந்து வெளியேற நேரிட்டார்.

நமது வச்சிரமணி அவர்கள் கிறித்தவரானது ஒரு மெய்யான மனமாற்றம் ஆகும். அது திருமறையின் உண்மைகளை உணர்ந்தும், இரட்சகராகிய இயேசு கிறிஸ்துவுடன் தமக்கு உண்டான ஒரு நேரிடையான அனுபவத்தின் அடிப்படையிலுமாகும். இதனை அவருடைய பின் வாழ்க்கை நமக்குத் தெளிவுப்படுத்துகிறது. அவருடைய மக்களின் வாழ்க்கையிலும் இத்தகைய அனுபவம் நிறைவேறியுள்ளதைக் காண்கிறோம். சில ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வாராய்ச்சியினிமித்தம் அன்னாரின் சொந்த ஊரான உசரத்து குடியிருப்பு சென்றிருந்தபோது, அங்கு இவரது குடும்பத்தைச்

சார்ந்தோரே பெரும்பாலும் அவ்வூரில் குடியிருக்கக் கண்டோம். இன்றுவரை அவ்வூரில் ஒரு கிறித்தவ குடும்பமும் இல்லை.

இதன் பின்னர் அவர் இங்கிலாந்துத் திருச்சபையின் கீழ் இயங்கி வந்த திருநெல்வேலி ஆதீனத்தில் கிறித்தவ உபதேசியாராகப் பணியாற்றினார். இதன் காரணமாக அவர் பிற்காலத்தில் "கிறிஸ்தியான் உபதேசியார்" என்று எல்லாராலும் அறியப்பட்டார். இறுதியில் அவர் தம் முதிர்வயதில் திருநெல்வேலிக்கு அருகே உள்ள ஆறுமுகநேரியில் குடியிருந்தார். அங்கு அவர் 1910 - ஆம் ஆண்டு மே மாதம் 10-ஆம் தேதி தாம் விசுவாசித்து, நேசித்து உறுதியாகப் பற்றிக் கொண்டு, உழைத்த கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். அவர் விரும்பிக் கேட்டுக் கொண்டபடியே அவருடைய சரீரம் உசரத்துக் குடியிருப்பில் அவருடைய சொந்த ஊரிலேயே அடக்கம் செய்யப்பட்டது. அவருடைய கல்லறை இன்றும் அங்கு உள்ளது.

வஞ்சிரமணி கிறிஸ்தியான் அவர்களின் கல்லறையில் அவரது வழிமுறையினரில் சிலர் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த வச்சிரமணி கிறிஸ்தியான் அவர்களின் வாழ்க்கை விவரங்கள் முழுமையாக நமக்குக் கிட்டவில்லை. இருப்பினும் சில உறவின்முறையார், வழிவந்துள்ளோரின் வாயிலாகச் சில விவரங்களே கிடைத்துள்ளன.

அவர் நல்ல திடகாத்திரமான உடல்கட்டு உடையவர். அவர் எப்பொழுதும் ஒரு கோட்டும், சுத்தமான வேஷ்டியும் அணிந்து, கம்பீரமாக இருப்பார். அந்நாட்களில் வயதான அம்மையார் ஒருவர், இவரது கம்பீரமான தோற்றத்தைக் கண்டு இவ்வாறு கூறினதாகச் சொல்லப்படுகிறது. 'இவர் பார்க்கும் வேலையோ உபதேசியார் வேலை, ஆனால் ஆளைப்பார்த்தால் கலெக்டர் துரைபோல் இருக்கிறார்' ஆம்! விக்கிரகங்களின் பின்னாகச் சென்று அலைந்து கொண்டிருந்தவர், இப்பொழுது விண்ணரசர் கிறிஸ்து இயேசுவின் துரைமகன் அல்லவா?

அவருக்கு ஒன்பது பிள்ளைகள் பிறந்தனர். அவர்களின் முதல் அறுவரும் சங்கை வடிவு என்றழைக்கப்பட்ட முதல் மனைவிக்கும், மற்ற மூவரும் இரண்டாவது மனைவிக்கும் பிறந்தவராவர். அவர்களது பெயர்களாவன :

1. வடிவம்மாள், 2. பரமசகாயம் ஞானமணி, 3. லிதியாள் அமிர்தம்மாள், 4. தவமணி கிறிஸ்தியான், 5. ஜெபமணி கிறி தியான் 6. ஞானதீபம் அம்மாள், 7. இராஜரத்தினம் கிறிஸ்தியான், 8. முத்தம்மாள், 9. ஆசீர்வாதம் பன்னேயா இவர் தம்மை இறை ஞான ஒளிக்குட்படுத்திய இயேசு பெருமானைப் போற்றிப் பாடல்களை இயற்றி அழகாகப் பாடக்கூடியவர். இவர் இனிய குரலில் பாடி பஜனைகள் நடத்தி, பிரசங்கம் செய்யும் திறமையுடையவர். இவர் இயற்றிய பாடல்கள் இவருடைய ஆழ்ந்த இறை பக்தியையும், கர்த்தராகிய இயேசுவின் மேல் இவர் வைத்திருந்த அன்பையும், அவரது கவிப்புலமையையும் நன்கு வெளிப்படுத்துகின்றன. இவர் இயற்றியுள்ள பாடல்களில் ஒன்று கீழ்வருமாறு:

'ஏற்று சிந்தம் ஏகாம்பர சருவேசுவரனை,
போற்று முக்தர் சுயாம்ப்ர கிருபாகரனை!
சாற்று மாமறை நூலாதரர் பேசிய
ஜகநாதன், குருபாதம், ஒருபோதுங்ம மறவாமல்,

பாலரை மார்போ டணைத்த சித்திரக்கரன்
பாங்கு புரிய ஜலமதில் நடந்த பதன்,
காலனை வதைக்க வென்றோர் குருசிலேறிய
கண்ணவனை, பண்ணவனை, புண்ணியனை எண்ணி நட'

'தேவர்கள் எக்காளம் ஊதச் சுப்ரமேகத்
தேரேறி விண்ணூடு சென்று சம்பிரமாக
யாவர்க்கும் சிங்காசனம் வீற்றுத் தீர்வை செய்யும்
ரட்சகனை, வச்சிரமணி மெச்சிப்பொரு ளார்ச்சனை செய்'

'கர்த்தரைத் தங்களுக்குத் தெய்வமாகக் கொண்ட ஜாதியும், அவர் தமக்குச் சுதந்தரமாகத் தெரிந்து கொண்ட ஜனமும் பாக்கியமுள்ளது.' (சங். 33:12).

**தொடரும்...**

I.J. ஜெபராஜ்
குருத்துவ மாணவர்

# பேராயர் அசரியாவும் நானும்

பேராயர் அசரியாவின் வாழ்க்கை வரலாறுகளை வாசிக்கும் போது நான் கண்டெடுத்து, சுவைத்த சில மாணிக்க கருத்துக்களை உங்களுக்கும் சுவைக்க கொடுக்கிறேன்.

1. அசரியா தனக்கு கொடுக்கப்பட்ட அழைப்பிற்கும் மிஷனரி பணிக்கும் தன்னை முழுவதுமாக அர்ப்பணித்திருந்தார். எந்தவித கடின உழைப்பிற்கும் அசரியா தயாராக இருந்தார். ஆண்டவருக்காக எந்தவித தியாகமும் செய்ய அவர் தயங்கியதே கிடையாது. ஆண்டவருக்காக உழைக்கும் படியாக அவர் தந்திருக்கும் அழைப்பு இரக்கமுள்ள தேவனிடத்திலிருந்து வந்திருக்கிறது என உணர்ந்தார். அவர் செய்த பணிகளில் அவருக்கு மிகுந்த மன மகிழ்ச்சி இருந்தது. மாட்டுவண்டியில் ஏறி அவர் மகிழ்ச்சியாக சுவிசேஷபணியில் ஈடுபடும் போது எடுத்திருக்கும் புகை படத்திலிருந்து அவர் உள்ளத்தில் ஆண்டவர் மீதுள்ள அர்ப்பணிப்பை நாம் உணரமுடிகிறது.

2. அவர் ஒரு ஜெபவீரர். ஜெபமே அவரது வாழ்விற்கு ஆதாரமாய் காணப்பட்டது. வீட்டிலாகிலும் வெளியிலாகிலும் ஊழியத்திற்காக கிராமத்தில் தங்கும் இடமாகிலும் அல்லது பயணம் சென்று கொண்டு இருக்கும் வேளையானாலும் சரி காலையில் 4 1/2 மணிக்கு எழுந்து ஆண்டவரோடு தனது அமைதி நேரத்தை செலவிட அவர் தவறியதே கிடையாது. இப்படி தான் நிறைவேற்றவிருந்த அனைத்து பணிகளுக்கும் தேவையான பெலத்தை, ஆண்டவரின் சமூகத்தில் காத்திருப்பதன் மூலம் பெற்றுக்கொண்டார்.

3 . அவருக்கு உள்ளான தாழ்மை இருந்தது. அசரியாவைக் குறித்து அறிந்தவர்கள் அனைவருக்கும் அவரது உண்மையான தாழ்மை உள்ளத்தையும் தாழ்மையான வாழ்க்கையையும் நன்கு தெரிந்திருந்தனர்.

4. அவர் சுயக்கட்டுப்பாடோடு வாழ்ந்தவர். கட்டுப்பாடு இல்லாத வாழ்க்கை பல பாவங்களை பிறப்பிக்கும் என்று அசரியா நம்பினார். அவரே நல்லொழுக்கத்தையும் கட்டுபாடையும் கடைபிடித்திருந்தபடியால் மற்றவர்களிடத்தில் ஒழுக்க நெறிகளை எதிர்பார்க்கும் எல்லா உரிமையும் அதிகாரமும் அவருக்கு இருந்தது.

5. ஆவிக்குரிய கண்ணோட்டத்தோடு எல்லா காரியங்களையும் பார்க்கும் ஆவல் உடையவராக இருந்தார். எதனையும் அற்பமாகவோ இலகுவாகவோ எண்ணாமல் முழுமனதாய் ஆழ சிந்தித்து விவாதித்து முடிவெடுத்தார்.

6. மக்களின் நலனுக்கே முன்னுரிமை தந்தார். அவர் தன்னோடு உழைத்து வந்த சக ஊழியர்களின் நிலைகளை மனதில் கொண்டு பொருள்களைக் குறித்தோ இடத்தைக் குறித்தோ கவலைப்படாமல் திட்டங்களை செயலாக்கினபடியால் அவர் தன்னோடு பணிபுரிந்தவர்களை வெகுவாய் அவர் விசுவாசித்து அவர்களை கண்ணியத்துடன் நடத்தினார்.

7 . மிஷனரி பணிக்கு குறிப்பாக திருச்சபை நிறுவும் நற்செய்தி பணிக்கு தன்னை முற்றிலும் அர்ப்பணித்திருந்தார். அவர் ஒரு பேராலயத்தின் பேராயர் என்ற பெரும் பதவியோடு இணைந்துள்ள அனைத்து திருச்சபை பொறுப்புகளையும் கவனித்து வந்த போதும், ஆத்துமாக்களை இரட்சிப்புக்குள் வழிநடத்தி மீட்கும் தெய்வப்பணியிலும், திருச்சபை நிறுவும் மிஷனரி பணியிலும் தனது தனி கவனத்தை செலுத்தினார்.

8. அவர் சுயமாக கற்றுக் கொண்ட மனிதர். தனது உடல் நல குறைவின் நிமித்தம் பட்டப்படிப்பை முடிக்காமல் போனாலும், அவருக்கு படிப்பதில் மிகுந்த ஆர்வம் இருந்தது. அவர் எங்கு சென்றாலும் எதைப்பார்த்தாலும் யாரை சந்தித்தாலும் புதிய புதிய காரியங்களை அறிந்து கொள்வதில் நாட்டம் உடையவராக இருந்தார். இவர் நூற்கள் வாசிப்பதில் மிகுந்த ஈடுபாடு உடையவர். கையில் புத்தகம் இல்லாமல் அவரை பார்ப்பது மிக அரிது.

9.காலத்தை நன்கு பயன்படுத்தி கொள்வதில் கண்ணும் கருத்துமாய் இருந்தார் அவருக்கு கொடுக்கப்பட்ட வாய்ப்புகளையெல்லாம் தன்னால் முடிந்தவரை நன்கு பயன்படுத்தினார்.

10 . தான் ஊழியம் செய்யும் படியாக தெரிந்து கொள்ளப்பட்ட மக்களின் தாய் மொழியை நன்கு கற்றுத்தேற தன்னை அர்ப்பணித்திருந்தார் உண்மையைக் கூற வேண்டுமானால் இலக்கிய தெலுங்கை நன்கு கற்றுத்தேறியதோடு கிராமங்களில் பேசப்படும் நடைமுறை தெலுங்கையும் கற்றுத்தேறி இருந்தார்.

இதிலிருந்து நாம் அறிந்து கொள்கிற மாபெரும் சத்தியம் என்னவென்றால் அசரியா அவரது பலவீனங்களின் மத்தியிலும் ஆண்டவருக்காக பெரிய காரியங்களை சாதித்திருந்தார்.

பேராயர் ஸ்டீபன் நீல் கீழ்க்கண்ட பலவீனங்கள் அசரியாவின் வாழ்க்கையில் காணப்பட்டதாக குறிப்பிடுகின்றார்.



அ. மற்றவரது பார்வையில் தான் செய்கின்ற காரியங்கள் நன்கு அறிந்து துணிவுடன் செயல் பட்டதுபோல் தோன்றினாலும், உண்மையில் அவர் தன்னைக் குறித்து திட்டவட்டமாக அறிந்து இருக்கவில்லை. தன்மேல் அதிகமான பொறுப்பு சுமத்தப்பட்டுள்ளது என்பதை மட்டும் அவர் நன்கு உணர்ந்திருந்தார்.

ஆ. தெலுங்கை அவர் நன்கு கற்றிருந்த போதிலும் அவர் தெலுங்கில் எழுதமாட்டார். பேராயர் ஒருவர் தான் எழுதுகின்றவற்றில் எந்த தவறையும் இழைக்க கூடாது என்ற கருத்தே இதற்கு காரணம்.

இ. ஆங்கிலத்தில் நன்கு தேர்ச்சி பெற்றவராக காணப்பட்ட போதிலும் தான் ஒரு பட்டதாரி அல்ல என்ற தாழ்வு மனப்பான்மை அவரை அதிகமாக பாதித்தது. எனவே அவர் எப்போதாகிலும் ஆங்கிலத்தில் முக்கிய சொற்பொழிவு ஆற்ற வேண்டிய வேளைகளில் அவர் தேவையில்லாமல் பதற்றம் அடைந்தார்.

இது ஒரு குறிப்பிட்டக் காலத்தில் இந்தியாவில் வாழ்ந்த ஒரு தனி மனிதனின் சரித்திரம் . எனவே அசரியாவின் வெற்றியும், தோல்வியும், அவர் வாழ்ந்த நாட்களின் பின்னணியத்தில்தான் மதிப்பீடு செய்யப்பட வேண்டும். இருந்தாலும் அவரது வாழ்க்கையையும் மிஷனரி பணியையும் குறித்த ஆய்வு நிச்சயமாக இளம் தலைமுறையினரை ஊக்குவித்து அவர்களை மிஷனரி ஊழியத்தில் ஆண்டவருடைய மகிமைக்காகவும் அவருடைய இராஜ்ஜியத்தின் பரப்புதலுக்காகவும் பெரும் சாதனைகளைச் செய்திட அறைகூவல் விடுக்கிறது.

---

# 1000 வயதான பாடல்

ஆல்வின் சிரோன்மணி
குருத்துவ மாணவர்

## மா தூய ஆவி! இறங்கும் வரலாறு

ஆம்! நம் பாமாலைப் புத்தகத்தில் இடம்பெற்றிருக்கும் மிகத் தொன்மையான பாடல்களுள் 'மா தூய ஆவி! இறங்கும்' பாடல் சிறப்பான ஒன்றாகும். தற்போது உள்ள வடிவில் கடந்த 350 ஆண்டுகளாக மட்டுமே இப்பாடல் பாடப்பட்டுவந்தாலும் இதன் தோற்றம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகும் என்று பாடல் ஆய்வாளர் Ian Bradley தனது 'Book of Hymns'ல் குறிப்பிடுகிறார்.

இப்பாமாலையின் மூல வடிவம் 9ம் நூற்றாண்டில் பாடப்பட்டுவந்த 'Veni, creator spiritus' என்ற லத்தீன் மொழி பாடலாகும். இப்பாடலை எழுதியவர் யார் என்பது குறித்த தகவல்களை வரலாற்று ஆய்வாளர்கள், Emperor Charles the Fat, Gregory the Great, St Ambrose என்று நிறைய பெயர்களை முன்வைக்கின்றபோதும், Rhabanus Maurus (c. 780 - 4 February 856) (Archbishop of Mainz in East Francia) என்ற போதகரே இதை எழுதியவர் என்று நிறைய ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

பத்தாம் நூற்றாண்டு முதலே இப்பாடல் பாடப்பட்டு வருவதற்கான ஆதாரங்களை நிறைய ஆய்வர்கள் தொடர்ந்து சுட்டிக்காட்டி வந்துள்ளனர். அந்நாட்களில், ஆலயமணிகள் முழங்க, மெழுகுவர்த்திகள் ஏற்றப்பட்டு, தூபவர்க்கத்துடன் பக்திசிரத்தையோடு ஒரு Ceremonial Hymஐஆகப் பாடப்பட்டு வந்துள்ளது இப்பாடல்.

Rabanus (c. 780 - 4 February 856) கிழக்கு Francia'வில் Archbishop'ஆக ஊழியம் செய்து வந்தார். வேத ஆராய்ச்சி மட்டுமல்லாது, கவிதை எழுதுதல், Encyclopaedia உருவாக்கத்தில் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளல், கல்வி, இலக்கணம், என்று பன்முகத்திறமை கொண்டவராக அறியப்படுகிறார். அவருடைய சரியான பிறந்த தேதி தெரியாவிட்டாலும் 801ம் ஆண்டு Benedictine Abbey of Fuldaவில் Deacon'ஆக அபிஷேகம் செய்யப்பட்டதற்கான குறிப்புகள் இருக்கின்றன. 803ம் ஆண்டு Abbey பள்ளியின் முதல்வராகப் பொறுப்பேற்ற அவர் அநேக பாடல்கள் எழுதியிருந்தாலும், Veni Creator Spiritus என்ற ராகத்தில் அமையப்பெற்ற இந்தப் பாடலே மிகப்பிரபலமாக விளங்குகிறது

பதினோராம் நூற்றாண்டில் ஆயர்கள் அபிஷேக ஆராதனைகள் (Ordination Services)பேராயர்கள் பிரதிஷ்டை(- Consecration of Bishops) ஆகிய ஆராதனைகள்/நிகழ்வுகளில் பாடப்பட்டு வந்த இப்பாடல், இன்றும் உலகமெங்கும் உள்ள அநேக திருச்சபைகளில் இந்த ஆராதனைகளில் பாடப்படுகிறது. "Come Holy Ghost Our souls inspire" எனும் ஆங்கில மொழிபெயர்ப்பை இங்கிலாந்தில் வசித்து வந்த John Cosin (1594-1672) எனும் ஆயர் எழுதினார். 1627ம் ஆண்டு வெளியான "Collection of Private Devotions in the Practice of the Ancient Church" எனும் புத்தகத்தில் இந்த ஆங்கில மொழிபெயர்ப்பு முதன்முதலில் வெளியிடப்பட்டது. Cosin, ஆவியானவர் சபையின் மேல் இறங்கிவருவதைக் குறிக்கும் வண்ணமாக இந்தப் பாடலை தனது திருச்சபையில் காலைதோறும் பாடச்செய்தார். இப்பாடலின் நான்காவது சரணம் பாடப்பட்டபின்னர் Doxology என்றழைக்கப்படும் திரியேகத் துதி பாடப்படுகிறது.

# வெஸ்யன் மெத்தடிஸ்ட் மிஷன் வரலாறு

4

டேனியல் மோகன்ராஜ்
திருவள்ளூர்

சென்ற இதழில் டாக்டர் கோக் அவர்களின் மாபெரும் முயற்சியில் இந்தியாவில் முதன் முதலில் வெஸ்லியன் மெத்தடிஸ்ட் மிஷன் பணிகளை துவங்க எண்ணம் கொண்டு இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்கு பிராயணம் செய்த முதல் கடல் பயணத்தின் போதே கர்த்தருக்குள் நித்திரையடைந்தார்.

தங்களின் மிஷன் தலைவரை இழந்த துக்கத்திலே இருந்த மிஷனரிமார்களை வழிநடத்த அக்குழுவிலே மிஷன் பணிகளில் அனுபவமும் திறமையுமுள்ள அருட்பணி. ஜேம்ஸ் லிஞ்ச் அவர்களிடம் தலைமையை பொறுப்பை ஒப்படைத்தனர்.

மிஷனரிமார்கள் ஜூன் 29, 1814 அன்று இலங்கையில் காலே என்ற பகுதியில் வந்திறங்கிய பிறகு இரண்டு இரண்டு பேராக ஒவ்வொரு பணித்தளத்தில் பணியாற்ற முடிவு செய்தனர். லிஞ்ச் மற்றும் ஸ்குவான்ஸ் அவர்கள் யாழ்ப்பாண பகுதிகளில் பணியாற்ற ஒப்புக்கொண்டு தங்களது பணிகளை துவங்கினர். யாழ்ப்பாணக் கோட்டையில் உள்ள டச்சு தேவாலயத்தில் பிரசங்கித்து வந்தனர். அப்பகுதியில் பணியாற்றிய போர்வீரர்கள் மத்தியிலும் காலனி மக்கள் மத்தியிலும் பிரசங்கிக்கத் தொடங்கினர், ஒரு பள்ளியைத் திறந்து வெற்றிகரமான பணிக்கான அடித்தளத்தை அமைத்தனர். மிஷனரியாக இருந்த லிஞ்ச் தனது பதவிக்காலம் முழுவதும் மிஷன் வேலைகளில் கல்விக்கு குறிப்பாக மிஷன் பள்ளிகளை நிறுவுவதில் அதிக கவனம் செலுத்தினார். கல்வி தான் ஒருவனுடைய வாழ்வாதாரத்தை மாற்ற முடியும் என்று அதிக நம்பிக்கை வைத்து இருந்தார். அதன் விளைவாக இன்றும் அவர் துவங்கிய பள்ளிகள், கல்லூரிகளாக வளர்ந்து பெயரை மதிக்கும் வண்ணமாக இலங்கையில் பெயர் பெற்றுள்ளது.

அருட்பணி. ஜேம்ஸ் லிஞ்ச் 1775 ஆம் ஆண்டில் அயர்லாந்தில் ரோமன் கத்தோலிக்க பெற்றோருக்கு பிறந்தார். எனினும், அவர் வளர்ந்த பிறகு அவருடைய கடவுள் மீதான நம்பிக்கை படிப்படியாக உயர்ந்து இயேசு கிறிஸ்துவின் மூலமாகவே இரட்சிப்படைய முடியும் என்று உணர்ந்து கொண்டார். 1808 ஆம் ஆண்டு தன்னுடைய 33 வது வயதில் அவரது விசுவாசத்தையும் கடவுள் நம்பிக்கையை மேம்படுத்துவதற்காக வடக்கு அயர்லாந்திலுள்ள இலண்டன் டெரியில் உள்ள YMCA இல் சேர்ந்தார். பின்னர் அவர் ஐரிஷ் மெத்தடிஸ்ட் மிஷனரியில் இணைத்து அயர்லாந்தில் உள்ள உல்ஸ்டரில் மற்றும் பல் வேறு மெத்தடிஸ்ட் சர்க்கியூட்டில் சுவிசேஷகரராக பணியாற்றினார். மெத்தடிஸ்ட் திருச்சபையுடனான நல்லுறவின் காரணமாகவும் மிஷனரி ஊழியத்தில் நல்ல அனுபவம் இருந்ததாலும் அவருக்கு இந்தியா மற்றும் இலங்கைக்கு சென்று மிஷனரி பணியாற்ற மெத்தடிஸ்ட் திருச்சபை அவருக்கு வாய்ப்பளித்தது.

மூன்று ஆண்டுகளாக மிஷனரி பணிகளை செவ்வன செய்து கொண்டிருந்த வேளையில். இந்தியாவில் வெஸ்லியன் மெத்தடிஸ்ட்பணிகள் 1817 வரை துவங்கப்படவில்லை. மதராஸில் வசித்த சில ஆங்கில மெத்தடிஸ்டுகளின் வேண்டுகோளுக்கு இணங்க 23 ஜனவரி 1817 அன்று ஜேம்ஸ் லிஞ்ச் சிலோன் நகரிலிருந்து யாழ்ப்பாணம் வழியாக சென்னைக்கு சென்றார். இந்தியாவின் முதல் வெஸ்லியன் மெத்தடிஸ்ட் இயக்கம் 1817 ஆம் ஆண்டில் மதராஸ் (இப்போது சென்னை) அருட்பணி. ஜேம்ஸ் லிஞ்ச் அவர்களால் நிறுவப்பட்டது.



அவர் இந்தியாவிற்குள் நுழைந்த போது நாகப்பட்டினத்தில் அவரை பற்றி கேள்விப்பட்டவர்கள் அவரை பிரசங்கிக்குமாறு அவரை கேட்டுக்கொண்டனர் அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க முதன் முதலில் மெத்தடிஸ்ட் மிஷனரி செய்தி இந்தியாவில் நாகப்பட்டினத்தில் வழங்கப்பட்டது. லிஞ்ச் தரங்கம்பாடியில் உள்ள ராயல் டேனிஷ் மிஷன் அமைப்பிற்கு விருந்தினராக அழைக்கப்பட்டார். மேலும் டென்மார்க்கின் பிரெட்ரிக் IV ஆம் அரசரின் கீழ் அனுப்பப்பட்ட முதல் டேனிஷ் மிஷனரிகளான பிளிட்ஸ் சாவ் மற்றும் சீகன்பால்கு ஆகியோரின் கல்லறைகளை பார்வையிட்டார். அவர் யாழ்ப்பாணத்தில் இருந்த போதே தமிழை நன்கு கற்றிருந்தார்.

மக்கள் அதிகம் கூடும் சமயங்களான இந்து திருவிழாக்களில் துண்டுப்பிரதிகளை விநியோகிக்கவும், பிரசங்கிக்கவும் கிடைத்த வாய்ப்புகளை பயன்படுத்திக்கொண்டார். ஜூன் 1818 இல், லிஞ்ச் ராயப்பேட்டாவில் ஒரு பங்களாவை வாங்கினார், அதோடு அதன் அருகில் இந்தியாவில் முதன் முதலில் மெத்தடிஸ்ட் தேவாலயமும் கட்டப்பட்டு மார்ச் 7 1819 அன்று கடவுளின் மகிமைக்காக இறையொப்படைப்பு செய்யப்பட்டது. பின்னர் அங்கிருந்து 3 மைல் தொலைவில் மக்கள் தொகை அதிகமிருந்த இடமான பாப்ஹாம் பிராட்வே என்று அழைக்கப்படும் பிளாக் டவுன் (தற்போதைய ஜார்ஜ் டவுன், சென்னை) பகுதியில் இரண்டாவது நிலத்தை லின்ச் வாங்கி அங்கு பழைய கட்டிடங்களுக்கு மத்தியில் ஒரு புதிய தேவாலயத்தை கட்டி அதை 25 ஏப்ரல் 1822 அன்று இறையொப்படைப்பு செய்தார். அவரது நம்பிக்கைக்குரிய பிரசங்கங்களின் வாயிலாக அநேகர் கடவுளுக்குள்ளாக நடத்தப்பட்டனர். மதராஸ் மற்றும் அதன் சுற்றுப்புறபகுதிகளின் எதிர்கால வாழ்க்கை புது விடியலை நோக்கி பயணிக்க துவங்கியது.

**தொடரும்...**

**திருவிதாங்கூர் சமஸ்த்தானத்தில்**
**(தென்கேரள திருமண்டலமும், கன்னியாகுமரி திருமண்டலமும்)**
**சீர்திருத்த திருச்சபை உருவாக வித்திட்ட**

அருள்திரு. இர்வின் ஞானமுத்து
தஞ்சாவூர்

# வேதமாணிக்கம் மகாராசன் 2

*கடந்த பதிவின் தொடர்ச்சி..*

**தஞ்சாவூரில் இருந்து திருவிதாங்கூருக்கு நற்செய்தி :**

மகாராசன் வேதமாணிக்கமும், மாசிலாமணியும் கிறிஸ்துவத்தை நன்கு புரிந்து கொள்வதற்காக மேலும் சில நாட்கள் தஞ்சாவூரில் தங்கியிருந்தார்கள். அடிக்கடி கோலப் அவர்களிடம் சென்று திருமறை கற்றுத் தெளிவு பெற்றார்கள். பின்னர் அங்கிருந்து தரங்கம்பாடி சென்று, திருச்சபைகளின் நிலைமையையும், கிறிஸ்துவ வாழ்க்கை முறைமைகளையும், திருப்பணியாளர்களின் அருட்பணிகளையும் நன்கு தெரிந்து கொண்டனர். தம்மோடு திருப்பணியாளர் ஒருவரை மயிலாடிக்கு அழைத்துச் சென்றால், இந்த நற்செய்தியை மயிலாடி மக்களுக்குச் சிறப்பாக அறிவிக்கலாமே என்று கருதி, தமது விருப்பத்தை கோலப்பிடம் தெரிவித்தார்.

அன்று திருவிதாங்கூர் மன்னர் ஆட்சிக்கு உட்பட்ட நாடாக இருந்தமையால் இந்து மதத்தைத் தவிர வேறு எந்த மதத்தையும் அங்கு நிறுவுதல் இயலாது என்றும் அவ்வாறு மதம் பரப்பும் முயற்சியில் ஈடுபடுபவர்க்கு மிகுந்த துன்பங்கள் ஏற்படும் என்றும் கோலப் அறிந்திருந்ததால், மகராசனின் வேண்டுகோளை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே இருவரும் குடும்பத்தாரிடமும் கோலப் மற்றும் அருட்பணி பணியாளர்களிடமும் அன்பு விடைபெற்று, கோலப்பும் மகராசன் குடும்பத்தாரும் கொடுத்த புதிய ஏற்பாடு, மெய்ஞானம், ஞான உபதேசக் குறிப்பிடம், நூறு சுலோகம், சுருக்கமான விளக்கம் ஆகிய நூற்களையும் பெற்றுக் கொண்டு சொந்த ஊர் நோக்கிப் புறப்பட்டனர். புறப்படும் முன்னர், அருட்திரு கோலப், மகராசனிடம், நீங்கள் ஊர் சென்று, உங்கள் நிலங்களை விற்றுவிட்டு, குடும்பத்துடன் தஞ்சாவூர் வந்து விடுங்கள். இங்கே கிறிஸ்துவ முறையில் சிறப்பாக வாழலாம்' என்று கூறினார். அதை மகராசன் வேதமாணிக்கம், அப்படியே ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், மறுக்காமல் விடைபெற்றார்.

மகராசனும், சிவகுருநாதனும் மயிலாடியை விட்டுச் சென்று பல மாதங்கள் ஆகிவிட்டன. அவர்களைப் பற்றிய செய்தி ஒன்றும் குடும்பத்தினருக்குக் கிடைக்கவில்லை. இன்று வருவார்கள், நாளை வருவார்கள் என்று ஏக்கத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த குடும்பத்தினர் ஏமாற்றம் அடைந்தனர். இன்று போல் அன்று செய்திப் போக்குவரத்து இன்மையால் செய்தி அனுப்பவோ, பெறவோ எந்த வழியும் இல்லை. ஏறத்தாழ ஓராண்டு காலம் ஆகியும் சென்றவர் திரும்பாததால், வழியில் மரணம் அடைந்திருப்பார்களோ என்று கலங்கித் தவித்தனர். வழக்கப்படி குறி சொல்பவர்களிடம் சென்று குறிகேட்டனர். குறிகாரர்களும், வழியில் அவர்கள் இறந்து விட்டார்கள் என்று கூறினர். இது கேட்ட குடும்பத்தார் கதறி அழுது கண்ணீர் சிந்தினர்; செய்வது அறியாமல் தவித்துத் தடுமாறினர். ஈமச்சடங்குகளையாவது செய்ய வேண்டும் என்று எண்ணியவர்களும் உண்டு. சிவகுருநாதனின் தாயார் தன் துக்கத்தை அடக்கிக் கொள்ள இயலாது கதறினாள். இளமையிலேயே நுண்ணறிவும், நற்பண்பும் பெற்றுச் சிறந்து விளங்கிய தன் புதல்வனின் பெருமைகளையெல்லாம் வாய்விட்டுக் கூறி கதறினாள். அருமையும் பெருமையும் உடைய தன் புதல்வன் யாரும் அறியா இடத்தில் இறந்து விட்டானே என்பதை எண்ணியபோது அந்த துயரத்தை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. இவ்வாறு அவள் கதறி அழுது கொண்டிருந்த ஓர் இரவுப்பொழுதில், வாயிலண்டை ஒரு குரல் கேட்டது. கதவைத் திறந்து ஓடிவந்து பார்த்தாள். என்ன ஆச்சரியம்! மாண்டு போனதாகக் கருதிய தன் மைந்தன் அங்கே நின்ற கொண்டிருந்தான். தாரை தாரையாக வடிந்த கண்ணீருடன் அவனைக் கட்டித் தழுவினாள்; முத்தமிட்டாள். வீட்டினுள் அழைத்துச் சென்று ஆறுதல் அடைந்தாள்.

பண்டார வேடத்தில் சென்ற தன் மைந்தன் பகட்டான ஆடை அணிந்து புதுப்பொலிவோடு வந்திருப்பதைக் கண்டு சொல்ல முடியாத மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினாள். அதுபோலவே மகராசனைக் கண்ட மனைவி, மக்களும் இவ்வாறே வியப்பால் விரிந்த விழிகளுடன் செய்வதறியாது நின்றனர்; சிறிது நேரம் இவ்வாறு எல்லை இல்லாத மகிழ்ச்சியில் திளைத்து நின்ற அவர்கள், பின்னர் தம் நிலைக்குத் திரும்பினர். அயலகத்து உறவினரும் நண்பர்களும் மகராசன் வீட்டு முற்றத்தில் கூடினார்கள்.

சிகம்பரம் சென்று வந்தவர்கள் கொண்டு வந்த விபுதி, பிரசாதம் ஆகியவற்றைப் பெற்றுச் செல்ல விரும்பிய அந்த மக்கள், விபுதியும், பிரசாதமும் வேண்டுமென்று கேட்டனர். அவர்களைப் பார்த்து மகராசன், 'இதோ நான் கொண்டுவந்த சர்வலோக நாதனின் அருள் பிரசாதம் என்று கூறி, தன்னிடமிருந்த பொதியைத் தரையில் வைத்து அவிழ்த்து அதனுள் இருந்த புதிய ஏற்பாட்டுப் புத்தகத்தையும், பிற நூல்களையும் எடுத்து நீட்டினார். அது கண்டு வியந்து நின்ற மக்களுக்கு அவர்கள் அதுவரை கேட்டு அறிந்திராத புதிய விளக்கங்களைக் கொடுத்தார். அந்த வார்த்தைகளைக் கேட்ட மக்களில் சிலர் வியந்தனர். சிலர் வெறுத்துப் பேசினர். மகராசன் வேதமாணிக்கம் தமது புதிய கருத்துக்களை செவிமடுத்துக் கேட்டவர்களுக்கு 'ஞான உபதேசம்' என்னும் நூலைக் கொடுத்து, வாசிக்கச் செய்து அதன் கருத்தை விளக்கி உரைத்தார்.

காலையிலும், மாலையிலும் தமது வீட்டு முற்றத்தில் அவர்களை உட்கார வைத்து நற்செய்தி நூலின் ஆழ்ந்த சத்தியங்களை அவர்களுக்கு உபதேசித்தார். இதுதான் மகராசன் வேதமாணிக்கம் இந்த மண்ணில் தொடங்கிய முதலாவது நற்செய்திப் பணியாகும். பணியைத் தொடங்கி, தம் வீட்டு வளாகத்தில் சீர்திருத்த கிறிஸ்துவத் திருச்சபைக்கான விதையை ஊன்றினார். இது நிகழ்ந்தது 1801 ஆம் ஆண்டாகும்.

மகராசன் வேதமாணிக்கம் குடும்பத்தினர் ஏற்கனவே எழுத்தறிவு பெற்றவர்கள். இந்த நாட்டு இலக்கிய, இலக்கணங்களையும், புராண நகல்களையும் கற்றவர்கள், எனவே, மகராசன் வேதமாணிக்கத்தின் புதிய உபதேசங்களை எளிதில் புரிந்து

கொள்ள அவர்களால் முடிந்தது. தமது உள்ளம் விரும்பிய உண்மைகள் மகராசன் வேதமாணிக்கத்கின் உரைகளில் விளக்கம் பெற்றதால், எந்தத் தடையுமின்றி அவர்கள் கிறிஸ்துவத்தை ஏற்றுக் கொண்டனர். இப்படி மதம் மாறியதம் குடும்பத்தினருக்கு புதிய பெயர்களைச் சூட்டுவதற்கு மகராசன் வேதமாணிக்கம் விரும்பினார். அந்தக் கருத்தை அவர்களிடம் கூறியபோது மிகுந்த மகிழ்ச்சியுடன் அவர்களும் உடன்பட்டனர். குடும்பத் தலைவரான பெருமாள் என்பவருக்கு 'ஞானமுத்து' என்றும், அக்கினி என்னும் பெயருடையவருக்கு யோசேப்பு' என்றும் சிவனுக்கு "பாக்கியநாதன்' என்றும், அபிராளுக்கு 'சாந்தாயி" என்றும் அவ்வைக்கு 'அனந்தாயி" என்றும் சிவகாமிக்கு 'மரியாள்" என்றும் புதிய பெயர்களைச் சூட்டினார். தஞ்சாவூரில் தாம் தங்கியிருந்தபோது தம்மை விருந்தோம்பி உபசரித்த உறவினர்களின் பெயர்களில் சிலவற்றைத் தம் மனைவிக்கும், மக்களுக்கும் இட்டு வழங்கினார். மனைவிக்கு சத்தியாயி எனவும், புதல்வியருக்கு பாக்கியாயி, மாலையம்மாள், அன்னம்மாள் என்றும் மூத்தமகனுக்கு தேவசகாயம் என்றும், இளைய மகனுக்கு மோசே என்றும் மாசில்லாமணியின் மனைவிக்கு ஏசுவடியாள் என்றும் பெயரிட்டார்.

இந்த வகையில் முதலில் பெயர் மாற்றம் பெற்றவர்களின் எண்ணிக்கை முப்பது, இந்த முப்பது பேரையும் கொண்டதே முதல் திருச்சபை என்று கூறவேண்டும். இந்த அடிப்படையில் கூறுவ தென்றால், இதுவே, இன்று கன்னியாகுமரி முதல் கேரளத்துக்கல்லடை ஆறு வரை பரந்து விரிந்து கிடக்கும் பகுதியில், இரண்டு பேராயங்களாக (தென் கேரளப் பேராயம் - கன்னியாகுமரிப் பேராயம்) வளர்ந்து நிற்கும் தென்னிந்தியத் திருச்சபைகளின் தாய்ச் சபையாகும். இச்சபையின் முதல் உபதேசியார் மகராசன் வேதமாணிக்கம் ஆவார். (அறிவர் சாமுவேல் தாசன், ஒரு விடுதலையின் வரலாறு, பக்கம் : 40- 44)

உழைக்கும் மக்கள் தங்களது அடிமைத் தனத்தை தாமே விரும்பி ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு இந்துத்துவம் செய்த சூழ்ச்சியின் மூகமூடியை மதமாற்றத்தின் மூலம் கிழித்தெறிந்த முதல் மனிதர் மகராசன் வேதமாணிக்கமே ஆவார். எதிர்நீச்சல் போடுவது புரட்சியாளர்களுக்கு அவசியமான ஒரு குணமாகும். இந்த குணம்தான் மகராசனை மதம் மாறுவதில் கொண்டு போய்விட்டது. இயேசுவின் வாழ்க்கை, பணி, போதனை ஆகியன அனைத்திலும் இத்தன்மையான புரட்சிகர தொனியே மேலோங்கியிருக்கக் காணலாம். அவர் தனக்குத்தானே கிறிஸ்துவ வலிமையை நிரூபித்துக் கொள்தலின் நீட்சியே, திருவிதாங்கூரில் முளைத்த சீர்திருத்தக் கிறிஸ்துவமாகும்.

மயிலாடி மண்ணில், சீரதிருத்த கிறிஸ்துவ சபையின் விதையை ஊன்றிவிட்டார் மகராசன் வேதமாணிக்கம். அது முளைத்து விட்டது. ஆனால், அதை வளரவிடாமல் தடுக்கும் முயற்சிகளும் தொடங்கிவிட்டன. மலையாள நாட்டைச் சேர்ந்த மயிலாடியில் கிறிஸ்துவ மார்க்கம் தோன்றியுள்ள செய்தி திருவிதாங்கூர் அரண்மனை வரை எட்டியது. அரசரும், அமைச்சரும், அரசு அதிகாரிகளும் முளையிலேயே, அதைக் கிள்ளி எறிந்துவிட முன்றனர். மகராசன் வேதமாணிக்கத்தையும் அவரது குடும்பத்தினரையும் அழித்து ஒழித்துவிட திட்டம் தீட்டினர். (அறிவர் சாமுவேல்தாசன் எழுதிய ஒரு விடுதலையின் வரலாற்றிலிருந்து)

**தஞ்சை நோக்கிப் பயணம்:**

1805 ஆம் ஆண்டில் 'தஞ்சைக்கு செல்ல வேண்டும். அங்குள்ள திருத்தொண்டர்களைச் சந்தித்து, தஞ்சாவூரில் நடைபெறுவதுபோல் ஆலயம் அமைத்து ஆராதனை நடத்துவதற்குத் தகுதி வாய்ந்த ஊழியரைத் தமக்குத் தர வேண்டும் என்று கேட்டுப் பெற வேண்டும் எனபதுதான் அந்த பயணத்தின் முதல் கட்டம். தமது நிலங்களில் அறுவடை முடிவது வரை காத்திருந்த மகராசன் வேதமாணிக்கம், அறுவடையால் வந்த வருமானம் பயணச் செலவுக்குப் போதாது என்று கண்டதால், கூடங்குளம் சென்று, அங்கே மேய்ச்சலுக்கு விட்டிருந்த தமது மாடுகளில் சிலவற்றை விற்று, தேவையான பணத்தைப் பெற்று, தஞ்சாவூருக்குப் புறப்பட்டார். திரும்பி வருவது வரை மயிலாடியில் ஆராதனை ஒழுங்காக நடைபெற வேண்டும் என்று கூறி, அந்தப் பொறுப்பை ஞானமுத்துவிடம் ஒப்படைத்து விட்டுத் தஞ்சை நோக்கிப் 1805 ஆம் ஆண்டில் பயணமானார்.

கோலப்பும், அங்குள்ள திருத்தொண்டர்களும், மகராசன் வேதமாணிக்கத்தைக் கண்டு மகிழ்ந்தனர். திருவிதாங்கூரிலுள்ள தமது காணிகளை விற்றுவிட்டு வந்து விட்டாரோ என்று வினவினார்கள். மகராசன் வேதமாணிக்கம் தமது நிலையை விளக்கினார். கிறிஸ்துவம் திருவிதாங்கூரில் கால் ஊன்றியபோது, தமக்கு ஏற்பட்ட இன்னல்களையும், இடுக்கண்களையும் எடுத்துக் கூறினார். என்றாலும் அங்கு திருச்சபைகளை நிறுவத் தாம் விரும்புவதால், இடம் பெயர்ந்து இங்கே வர விரும்பவில்லை எனவும், அங்கு ஒரு திருச்சபை நிறுவப்பட்டு விட்டதால், பொருத்தமான திருத்தொண்டர்கள் இருந்தால், மேலும் சபைகள் உருவாவதற்கு நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. எனவே, இதற்கு உதவி செய்தால் அங்கே திருச்சபைகளை வளர்க்க முடியும் என்றார்

**வில்லியம் தோபியாஸ் ரிங்கல்தோபே வருகை :**

இதுகேட்ட கோலப், மகராசன் வேதமாணிக்கத்தின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டார். நிலபுலன்களை விற்றுவிட்டுக் குடும்பத்துடன் இங்கே வராமல் இருந்தது நல்லது. ஏனெனில், ஜெர்மன் நாட்டிலிருந்து, வில்லியம் தோபியாஸ் ரிங்கல்தோபே என்னும் அருள்தொண்டர் ஒருவர் இங்கு வந்திருக்கிறார். அவர்



First Church (1809)

தரங்கம்பாடியில் தங்கியிருந்து தமிழ் படிக்கிறார். தமிழ்நாட்டில் எங்கிருந்து அழைப்பு வருகிறதோ அங்கு செல்ல விரும்புகின்றார். அவரைத் திருவிதாங்கூருக்கு அனுப்ப விரும்புகிறேன் என்று கூறினார். மகராசன் வேதமாணிக்கம் இந்த வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ந்தார். கோலப் அவர்களிடம் கடிதம் பெற்ற தஞ்சாவூர் மிஷனை சார்ந்த ஏசுவடியான் என்னும் உபதேசியாரை உடன் அழைத்துக் கொண்டு தரங்கம்பாடி சென்றார்.

தரங்கம்பாடியில் தமிழ் படித்துக் கொண்டு, திருப்பணியாற்ற தமக்கு அழைப்பு கிடைக்கும் இடத்திற்குப் போக ஆயத்த நிலையில் இருந்த திருத்தொண்டர் ரிங்கல் தோபேவை மகராசன் வேதமாணிக்கம் சந்தித்து, கோலப் அவர்களின் கடிதத்தைக் கொடுத்து, தமது கோரிக்கையையும் அவர் முன்வைத்தார். உடன் சென்றிருந்த ஊழியர் ஏசுவடியான் மகராசன் வேதமாணிக்கத்தைப் பற்றி விளக்கி உரைத்தார். திருவிதாங்கூருக்கு வர ரிங்கல் தோபே ஒப்புக் கொண்டார். ஓர் ஐரோப்பிய போதகர் தமது நாட்டுக்கு வரப்போகிறார் என்பதை எண்ணியபோது மகராசன் வேதமாணிக்கம் அடைந்த பூரிப்புக்கு அளவே இல்லை. ரிங்கல் தோபே அவர்களை ஏற்று வணங்கி, அவரிடம் விடைபெற்று, ஏசுவடியான் உபதேசியாருடன் தஞ்சாவூருக்கு திரும்பினார். 'ஏசுவடியான்' உபதேசியாரை உடன் அழைத்துக் கொண்டு, தஞ்சாவூரிலிருந்து புறப்பட்டு மயிலாடியை வந்தடைந்தார்.

அதுவரை எந்த இடரையும் பொருட்படுத்தாமல் ஒழுங்காக, ஆராதனை நடத்திக் கொண்டிருந்த மக்களிடம், தஞ்சாவூரிலும் தரங்கம்பாடியிலும், தமக்குக் கிடைத்த செய்திகளையும் விரைவில் ஓர் ஐரோப்பியப் போதகர் திருவிதாங்கூரில் பணியாற்றுவதற்காக வரவிருக்கின்றார் என்ற இனிய செய்தியையும் கூறி அவர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தினார். பின்னர், தம்முடன் வந்த ஏசுவடியான் உபதேசியாரை அனைவருக்கும் அறிமுகம் செய்து, அன்று முதல் இருவரும் முன்பை விட தீவிரமாகப் பணியாற்றியதன் காரணமாக, முன்னர் இவரை வெறுத்து ஒதுக்கிய குடும்பத்தாரில் பலர் இப்பொழுது கிறிஸ்துவர்களாயினர்.

தஞ்சாவூரிலிருந்து தம்முடன் அழைத்து வந்த ஏசுவடியான் உபதேசியார் ஊர் திரும்பி விட்டார். ரிங்கல் தோபே இன்னும் வந்து சேரவில்லை. அவரது வருகையை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த மகராசன் வேதமாணிக்கத்திற்கு ஒரு இனிய செய்தி வந்தது. அருள் தொண்டர் ரிங்கல் தோபே ஆரல்வாய் மொழிக்கு வந்திருக்கிறார் என்பது அந்தச் செய்தி. (அறிவர் சாமுவேல் தாசன், ஒரு விடுதலையின் வரலாறு, பக்கம் : 46- 51)

1806, ஏப்ரல் 25 ஆம் நாள் திருவிதாங்கூர் வரலாற்றில் ஒரு திருப்பு முனையாகும். அன்றுதான் வில்லியம் தோபியஸ் ரிங்கல் தோபே என்ற சீர்திருத்தக் கிறிஸ்துவ மிஷனரி, மகராசன் வேதமாணிக்கம் அழைப்பின் பேரில், ஆரல்வாய் மொழி கணவாய் வழியாக ஆங்கில அதிகாரி மெக்காலே உதவியாலும் திருவிதாங்கூருக்குள் கால் பதித்து, மகராசன் வேதமாணிக்கத்தோடு இணை சேர்க்கையாகி புது சரித்திரத்திற்கு அச்சாரமானார்.

# தூத்துக்குடி கால்டுவெல் மேல்நிலைப்பள்ளி

அருள்திரு. இரா. சாமுவேல் ஜெயசீலன்,
கீதாநகர்

*கடந்த மாத தொடர்ச்சி...*

## ஆரம்ப கால வரலாறு

சாயர்புரம் கல்லூரி ஒரு கிராமத்தில் இருப்பதினால் அதனால் உண்டாகக்கூடிய நன்மைகளை விட தூத்துக்குடி போன்ற ஒரு நகரில் இருக்கக் கூடுமானால் அதனால் ஏற்படக்கூடிய நன்மைகள் அதிகமாய் இருக்கும் என்னும் கருத்து SPG வட்டாரங்களில் நிலவத்தொடங்கியது. M.D.C யிலும் சிலர் அப்படி எண்ணினார்கள். 1882ல் சாயர்புரத்தில் மொத்த வீடுகள் 22 ஆனால் தூத்துக்குடியில் மக்கள் தொகை 11000 பேர். எனவே ஷாராக் ஐயரும் பேராயர் கால்டுவெல்லும் கலந்து ஆலோசித்து தூத்துக்குடிக்கு கல்லூரியை மாற்றுவதற்கு தேவையான பணத்தை சேகரித்து தூத்துக்குடி கடற்கறை சாலையில் நலிவடைந்து மூடப்பட்டிருந்த Cotton Press பல கிராமங்களிலிருந்து கொண்டு வரப்படும் பெரிய பஞ்சு மூட்டைகளிலிருந்து கொட்டைகளை பிரிக்கிற ஆலையும் கப்பலுக்கு கொண்டு செல்லும்வரை பஞ்சு மூட்டைகளை வைக்கும் கிட்டங்கியும் மற்றும் வெங்காய கிட்டங்கியும் (Godown) இருந்த இடத்தையும் அதிலிருந்த பங்களாவையும் கட்டடத்தையும் சேர்த்து சுமார் 3 ஏக்கர் 35 சென்ட் இடத்தை 1883ம் ஆண்டு விலைக்கு வாங்கிதொடக்கத்தில் உயர்நிலைப் பள்ளியையும், கல்லூரியையும் தூத்துக்குடிக்கு மாற்றினார்கள். பஞ்சு மூட்டைகளை அடுக்கி வைக்கும் கிட்டங்கி தான் மாணவர்கள், ஆசிரியர்கள் கூட்டுப்பிரார்த்தனைக்கு கூடும் இடத்திற்கு எதிராக இருக்கிற பெரிய கட்டிடம், சிற்றாலத்திற்கு எதிரே இருக்கிற கட்டிடம் தான் வெங்காயகிட்டங்கி. அது முதல் அக்கல்லூரியின் பெயரும் கால்டுவெல் கல்லூரி என்று மாற்றப்பட்டது. கால்டுவெல் கல்லூரி வளாகத்திற்கு சற்று பின்பக்கமாக இயங்கிவந்த A.V. பள்ளிக்கூடம் உயர்நிலைப் பள்ளியோடு இணைந்தது. தூத்துக்குடி பேட்ரிக்ஸ் ஆலய வளாகத்தில் கல்லூரி மாணவர்கள் தங்கும் விடுதி 1883 முதல் 1894ம் ஆண்டு வரை இருந்தது. தூத்துக்குடி பேட்ரிக்ஸ் சேகர குருவானவர் சாமுவேல் ஐயா அவர்கள் விடுதி கண்காணிப்பாளராகவும் இருந்தார்கள். ஷாராக் ஐயரே, உயர்நிலைப் பள்ளிக்கும் முதல்வராக இருந்தார்.

சாயர்புரம் S.P.G கல்லூரி, என்றழைக்கப்பட்ட கல்லூரி தூத்துக்குடிக்கு மாற்றப்பட்டபின், கால்டுவெல் கல்லூரி என்று அழைக்கப்பட்டதற்கு ஒரு முக்கிய காரணம் பேராயரின் முயற்சியினாலன்றி கல்லூரி உருவாகியிருந்திருக்க முடியாது. பேராயர் கால்டுவெல் அவர்கள் 1884ம் ஆண்டு மேலும் 1 ஏக்கர் 12 சென்ட் இடத்தை 20000 ரூபாய்க்கு வாங்கினார்.

SPCK சங்கத்தாரின் ஆதரவை இங்கிலாந்தில் பேராயர் கால்டுவெல் பெற்றுக் கொண்டதை அறிந்த MDC கல்லூரிக்குக் கொடுத்து வந்த உதவித் தொகையை குறைக்க திட்டமிட்டனர். ஆண்டுதோறும் கல்லூரிக்குக் கொடுத்து வந்த உதவித் தொகையை 8000 லிருந்து 4100 ஆக குறைத்து விட்டனர். ஆனால் இக்காலக்கட்டத்தில் கல்லூரியிலும் உயர்நிலைப்பள்ளியிலும் கற்றவர்கள் 800 பேர். இங்கிலாந்திலிருந்து வந்ததும் பேராயர் கால்டுவெல் கல்லூரியின் நுழைவு வாயிலில் சிற்றாலயத்தை கட்டி 1886ல்பிரதிஷ்டை செய்தார். 1887ம் ஆண்டு திருநெல்வேலிக்கு வருகைத் தந்த கல்கத்தா கண்காணியர் பேராயர் ஜாண்சன் இக்கல்லூரிக்கு வந்து மாணவர்களுக்கு கல்லூரி சிற்றாலயத்தில் சிறப்புச் செய்தி கொடுத்தார்.கல்லூரியையும் உயர்நிலைப்பள்ளியையும் பார்வையிட்டு, கல்லூரி விழாவில் (College Day) கலந்து கொண்டு சிறப்பித்தார். 'இந்தியாவில் இதுபோன்ற கல்லூரி வேறொன்றில்லை. இதன் நல்வாழ்வில் சென்னை மாகாணம் முழுவதும் அக்கறைக் கொண்டுள்ளது. தேசம் முழுவதற்கும் இது பேராசீர்வாதமாக விளங்கும் என்று நம்புகிறேன்' என்று எழுதிவைத்தார்.

1894ம் ஆண்டு தூத்துக்குடி கால்டுவெல் கல்லூரி 50 வது ஆண்டுவிழாவை சிறப்பாகக் கொண்டாடியது. தொடக்கப் பள்ளியிலிருந்து கல்லூரி வரை கல்விகற்ற மாணவர்களின் எண்ணிக்கை 1500.

கால்டுவெல் கல்லூரி அன்றைய சென்னை பல்கலைக்கழகத்திலே முதல் தரமான கல்லூரியாக சிறந்து விளங்கியது. ஆனால் M.D.C-க்கும் பேராயர் கால்டுவெல்லுக்கும் இடையே ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் M.D.C கல்லூரிக்கான உதவித் தொகையை மிகவும் குறைத்துக் கொடுத்ததால் தூத்துக்குடி கால்டுவெல் கல்லூரி தொடர்ந்து இயங்க முடியாமல் 50 ஆண்டுவிழா கொண்டாடிய 1894ம் ஆண்டே திருச்சிராப்பள்ளி SPG கல்லூரியுடன் இணைக்கப்பட்டது. (பிஷப் ஹீபர் கல்லூரி, திருச்சி). கால்டுவெல் கல்லூரிவிடுதியில் தங்கிப் படித்த மாணவர்கள் திருச்சி SPG கல்லூரிக்கு மாற்றப்பட்டனர். அங்கு பேராயர் கால்டுவெல் விடுதி ஒன்றைஏற்படுத்தி அங்கு தங்கி பயின்றார்கள். கால்டுவெல் கல்லூரி கால்டுவெல் உயர்நிலைப்பள்ளியாக மட்டும் இருந்தது. இதுவே கால்டுவெல் பேராயரின் மரணத்தை ஓரளவு துரிதப்படுத்தியது.

கால்டுவெல் மேல்நிலைப்பள்ளியின் மூலம் இந்திய நாட்டிற்கு பலதேசிய விளையாட்டு வீரர்கள் உருவாகி இருக்கிறார்கள். மாநில விளையாட்டு வீரர்கள் உருவாகி இருக்கிறார்கள் (திரு. ஆபிரகாம் கோஷி, திரு. மோசஸ்...) அதேபோல் நாட்டிற்குத் தரமான தலைவர்கள், அதிகாரிகள் (கூடுதல் கலெக்டர் திரு. G.K. அருண்சுந்தர் தயாளன், மதுரை மாவட்டம்), மருத்துவர்கள், பொறியியல் வல்லுநர்கள், விஞ்ஞானிகளை உருவாக்கியிருக்கிறது. இன்றும் தூத்துக்குடி பட்டணத்தில் தலைசிறந்த மருத்துவர்கள் கால்டுவெல் பள்ளி மாணவர்களே. (டாக்டர். V.M. லெட்சுமணன், டாக்டர். விஜயசேகர், டாக்டர்.ராம் சுந்தர், டாக்டர். செல்வராஜ்.....). 5 ஏக்கர் 18 சென்ட் இடத்தில் கடற்கறை சாலையில் அமைந்திருக்கும் கால்டுவெல் மேல்நிலைப்பள்ளியின் பணி சிறக்க ஜெபிப்போம், ஒத்துழைப்பு கொடுப்போம்.

J.ஜான் ஞானராஜ்
கல்லிடைக்குறிச்சி

# மூன்று கட்டங்களாக தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் நடைபெற்ற தோள் சீலைப் போராட்டம்

**அறிமுகம்**

இன்றைய தமிழகத்தின் கன்னியாகுமரி மாவட்டமும் இன்றைய கேரளத்தின் திருவனந்தபுரம் மாவட்டமும் அன்று தென் திருவாங்கூர் சமஸ்தானம் என்று அழைக்கப்பட்டது. இந்த பகுதியில் பிற்பட்ட மற்றும் தாழ்த்தப்பட்ட 18 சமூகத்தினர் மிகவும் ஒடுக்கப்பட்டார்கள். ஒடுக்கப்பட்ட இந்த 18 சமூகத்தின் பெண்கள் தங்களது மார்பகத்தை மறைத்து மேலாடை எனும் தோள்சீலை அணிவதற்கு ஜாக்கெட் எனும் ரவிக்கை அணிவதற்கு சுமார் 220 ஆண்டுகளுக்கு முன்னதாக அக்கால திருவாங்கூர் சமஸ்தான அரசு தடை செய்திருந்தது. இந்தத் தடை அகற்றப்படுவதற்காக மூன்று கட்டங்களாக தோள்சீலைப் போராட்டம் என்ற மேலாடை அணியும் போராட்டம் (Upper Cloth Movement) நடைபெற்றது.

இந்த 18 சமூகத்தினரின் உடல் மற்றும் உடைமைகளுக்கு ஏராளமான வரிகள் விதிக்கப்பட்டிருந்தன ஏராளமான அடக்குமுறைகளையும் கொடுமைகளையும் அந்தகால திருவாங்கூர் சமஸ்தான அரசால் அவர்கள் அனுபவித்து வந்தார்கள் திருவாங்கூர் சமஸ்தானம் சார்பில் ஆலய கட்டிடங்கள், அரண்மனை கட்டிடங்கள், கட்டப்படுகிற போது இந்த 18 சமூகத்தைச் சார்ந்த சிறுபிள்ளைகள் பலி கொடுக்கப்பட்டனர்.

இது பெரும் கொடுமையான சம்பவம் ஆகும். இந்த ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தினரில் தென் திருவாங்கூரில் நாடார் சமூகத்தினரும் வடதிருவாங்கூரில் ஈழவர் சமூகத்தினரும் பெரும்பான்மையாக வசித்து வந்தனர். பெரும்பான்மையாக இவர்கள் வசித்த போதும் நம்பூதிரி பிராமணர், நாயர், குரூப், நாஞ்சில் நாட்டு வெள்ளாளர், ஆகிய நான்கு சமூகத்தினர். தென் திருவாங்கூர் ஆட்சியாளர்களோடு இணைந்து இந்த 18 சமூகத்தினரை கடுமையாக கொடுமைப்படுத்தினர். 18 சமூகத்தின் பெண்களுக்கு மார்பக வரி விதிக்கப்பட்டது ஆண்களுக்கு மீசைக்கு வரி அவர்கள் வேலை செய்ய பயன்படுத்தும் அனைத்து பொருட்களுக்கும் வரி என ஏராளமான வரிகள் விதிக்கப்பட்டது.

அதோடு மட்டுமல்லாமல் ஊழியம் என்ற போர்வையில் தென் திருவாங்கூர் ஆட்சியாளர்களுக்கும் தென் திருவாங்கூர் ஆட்சியாளர்களின் ஏவல் ஆட்களாக செயல்பட்ட முன்பு குறிப்பிட்ட நான்கு உயர் வகுப்பினருக்கும் இலவசமாக வேலைகளை செய்யும் சூழ்நிலையும் இவர்களிடம் காணப்பட்டது மறுத்தால் பிரம்படி கொடுக்கப்பட்டது கோவிலில் நுழையும் உரிமை அவர்களுக்கு இல்லை. நான்கு உயர் வகுப்பினர் வசிக்கும் தெருக்களில் நடந்து செல்லும் உரிமை இவர்களுக்கு இல்லை குடைபிடித்து செல்லும் உரிமை இல்லை, நான்கு கால் கொண்ட நாற்காலி உபயோகிக்கும் உரிமை இவர்களுக்கு இல்லை. மூன்று கால் கொண்ட முக்காலியை மட்டுமே இவர்கள் பயன்படுத்த வேண்டும். தங்களுடைய வீட்டின் மேற்கூரையில் ஓடு போடும் உரிமை இவர்களுக்கு இல்லை.தண்ணீர்க் குடங்களை இடுப்பில் வைத்து எடுப்பதற்கு இவர்களுக்கு தடை இருந்தது ஆண்கள் தலைப்பாகை அணிவதற்கு தடை இருந்தது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் ஒடுக்கப்பட்ட இந்த 18 சமூகத்தினரின் விடுதலை வாழ்வுக்காக தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் மிஷினரி ஊழியம் செய்த எல். எம். எஸ் மிஷினரி சங்கத்தார் குரல் கொடுத்தனர்.

ஒடுக்கப்பட்ட இந்த 18 சமூகத்தினரும் தங்களது மார்பகத்தை மறைத்து மேலாடை /ஜாக்கெட்/ரவிக்கை அணியும் உரிமையை பெற மூன்று கட்டங்களாக வெகுஜன போராட்டத்தை முன்னெடுக்க வேண்டி இருந்தது இந்த போராட்டம் குறித்து சமீபகாலத்தில் மதமாற்றத்திற்காக நடைபெற்ற போராட்டம் என கொச்சைப்படுத்தும் நூல்கள் பிற மதத்தவரால் வெளியிடப்படும் அவல நிலை காணப்படுகிறது இந்த காலகட்டத்தில் மூன்று கட்டமாக இந்த போராட்டத்தை முன்னெடுத்துச் சென்று விடுதலை வாழ்வை பதினெட்டு சமூகத்தினருக்கும் பெற்றுக்கொடுத்த மிஷனரிகள் குறித்தும், ஒடுக்கப்பட்ட 18 சமூகத்தினர் குறித்தும், இந்தப் போராட்டக்களம் குறித்தும் விளக்கமாக காண்போம்.

ஒடுக்கப்பட்ட 18 சமூகப் பட்டியல் ஈழவர் (தீயர்,பில்லவர்), நாடார் (சாணார்), துலுக்கப் பட்டர் (மாப்பிள்ளை முஸ்லிம்), கத்தோலிக்க நசுரானியர், குறவர், பாணர், வாணியர், கருமறவர், சாம்பவர்(பறையர்), பரவர் மற்றும் முக்குவர், கைக்கோளர், இடையர், நாவிதர்(சவரத் தொழிலாளர்), வண்ணார்(சலவைத் தொழிலாளர்), காமிண்டர் (வெள்ளாள கவுண்டர்), கம்மாளர், புலையர் மற்றும் பள்ளர், சக்கிலியர் (அருந்ததியர்)

திருவாங்கூர் சமஸ்தானத்தில் ஒடுக்கப்பட்ட மேற்கண்ட பதினெட்டு சமூகங்களில் ஈழவர் வட திருவாங்கூரில் பெரும்பான்மை சமூகமாகவும் நாடார் திருவாங்கூரில் பெரும்பான்மை சமூகமாகவும் இருந்தனர் ஆனாலும் இவ்விரு சமூகத்தினரும் உயர் வர்க்க நம்பூதிரி பிராமணர்களிடமிருந்து முப்பத்தாறு அடி தூரம் தள்ளி நிற்க வேண்டும், நாயர்களிடமிருந்து 12 அடி தூரம் தள்ளியே நிற்க வேண்டும். இவ்விரு சமூகத்தினரை காட்டிலும் சிறுபான்மையாக வாழ்ந்த எஞ்சிய 16 சமூகத்தினரும் கடுமையான ஒடுக்குமுறைகளை உயர் வர்க்கத்தினரிடமிருந்து சந்திக்க வேண்டியது இருந்தது.

முதல்கட்ட தோள்சீலைப் போராட்டம் - (1822 -1823)

தொடரும் ...

# அழகிய சுரண்டை மனிதர்

மன்னா செல்வகுமார்

ஜான் தியாப்பிலஸ் ஜார்ஜ் பேரன் புரூக் ஐயரவர்கள் இந்தியாவில் நமது தமிழ்நாட்டில் 1844 - 1859 வரை திருநெல்வேலி மாவட்டம் சுரண்டை பகுதிகளில் ஏறத்தாழ 14 ஆண்டுகள் மிஷனரிப் பணி செய்து, பின் ஓராண்டு சிவகாசி பகுதியில் பணியாற்றி, விருதுநகர் மாவட்டம் பனையடிபட்டி கிராமத்திற்கு அருகிலுள்ள செந்தட்டி அய்யனார் கோவில் என்ற கிராமத்தில் அருட்பணி செய்ய சென்றபோது காலரா நோயினால் பாதிக்கப்பட்டு 1859 மார்ச் 25ம் தேதி, தனது 41 வது வயதில் மரித்துப் போனார்.

இவரது தகப்பனாரும், தாயாரும் ஜெர்மன் தேசத்திலிருந்து இந்தியாவிற்கு 1817-ம் ஆண்டு லூத்தரன் சபையின் இரண்டு மிஷனரிகளோடு சி.எம்.எஸ் (CMS) சார்பாக பணியாற்ற வந்தவர்கள். 1817 - 1823 வரை சென்னையிலும், பின்பு தரங்கம்பாடி, மாயவரம் பகுதிகளில் 1823 - 1831 வரை மிகச் சிறப்பான பணிகளை ஆற்றிவிட்டு 1831ஆம் ஆண்டில் மீண்டும் தன் சொந்த நாட்டிற்கே சரீர பலவினத்தினிமித்தம் திரும்பினர். 1833ம் ஆண்டு, மே 6-ம் தேதி தேவராஜ்யம் சென்றடைந்தார் தகப்பனார். இவர்கள் நன்றாக தமிழை அறிந்தவர்கள்.

1818ம் ஆண்டு மேற்படி மிஷனரி தம்பதியினருக்கு மகனாக சென்னையில் தான் பேரன்புரூக் ஐயரவர்கள் பிறந்தார். தொடக்க கல்வியை சென்னையிலே கற்றுள்ளார். பின் உயர்கல்விக்காகவும், அதன்பின் இறை கல்வியை கற்கவும் லண்டனுக்கு சென்று (1839 - 1843 வரை) படித்து விட்டு, 1843 ஆம் ஆண்டு டீக்கனாக அருட்பொழிவு பெற்று, 1844 ஆம் ஆண்டில் குருப் பட்டமும் பெற்று. முழுநேர மிஷனரியாக அபிஷேகம் செய்யப்பட்டார். 1844ம் ஆண்டு முதல் 1858 வரை சுரண்டை பகுதிகளில் மகத்தான பணியாற்றினார். கனம் ரேனியஸ் அவர்கள் 1817-ல் தொடங்கிய அருட்பணியைத் தொடர்ந்து செய்தார் பேரன்புரூக் ஐயர். அப்போது கடுமையான உபத்திரவங்கள் இப்பகுதிகளில் ஆண்டவரை ஏற்றுக் கொண்ட முதல் தலைமுறை விசுவாசிகளுக்கு ஏற்பட்டது. இப்பகுதியில் இருந்த சபைகள் எண்ணிலடங்கா உபத்திரவங்களை சந்தித்தன. இந்த சூழ்நிலையில் தான் கனம். பேரன் புரூக் இந்த பகுதிக்கு அருட்பணியாற்ற வந்தார். 1844ம் ஆண்டு அக்டோபர் 25ம் நாள் பாளையங்கோட்டை வந்து சேர்ந்து, சுரண்டை பகுதியில் தனது ஊழியத்தை ஆரம்பித்தார். 1846இல் சுரண்டையில் ஆரம்பித்த செகண்டரி போர்டிங் பள்ளி அநேக கல்விமான்களை உருவாக்கியது. இன்றைக்கு பேரன் புரூக் மேல்நிலைப்பள்ளி என அழைக்கப்படுகின்றது,

அன்றைய நாட்களில் காலரா நோய்க்கு ஏராளமான மக்கள் மருந்துகள் இல்லாத காரணத்தால் பலியாயினர். இதை கண்ட ஐயரவர்கள் சுரண்டையில் மிஷன் மருத்துவமனையை ஆரம்பித்து, நாட்டு வைத்தியர் சங்கரலிங்கம் செட்டியார் என்பவரது உதவியுடன் மருத்துவ பணியாற்றி அநேகரை காலரா நோயிலிருந்து காப்பாற்றினார்.

பத்து ஆண்டுகள் ஊழியம் நிறைவுற்று பல கிராமங்களில் திருச்சபைகளும், பள்ளிகளும் நிறுவப்பட்ட நிலையில் 29.10.1854 ஆம் நாள் ஐயரவர்களின் மனைவி காய்ச்சலால் பாதிக்கப்பட்டு மரித்துப் போனார்கள். ஆனால் பேரன்புரூக் ஐயரவர்கள் ஊழியப் பாதையில் சற்றும் சோர்வடையவில்லை. பின்வாங்கவும் இல்லை. 1855ம் ஆண்டு இங்கிலாந்து சென்று ஜெர்மனியில் போதகராக பணியாற்றும் தனது மைத்துனர் வசம் தன் மூன்று பிள்ளைகளையும் ஒப்படைத்துவிட்டு, இரண்டு ஆண்டுகள் 3 குழந்தைகளுடன் ஜெர்மனியில் வசித்தார். கர்த்தருடைய அழைப்பு தனக்கு இந்தியாவே என்பதை திட்டமாக உணர்ந்து பிள்ளைகளின் மேல் உள்ள பாசத்தை தியாகம் செய்துவிட்டு 1857-ல் இந்தியா திரும்பினார். 1857 ஆகஸ்ட் மாதம் மீண்டும் சுரண்டைக்கு வந்து தான் விட்டுச் சென்ற அருட்பணியைத் தொடர்ந்தார். 100 கிலோமீட்டர் சுற்றளவிற்கு நடந்தே சென்று, மனைவியை இழந்தும், பிள்ளைகளை பிரிந்தும் ஆண்டவருக்காக அருட்பணியாற்றினார். சுரண்டை திரும்பிய ஓரிரு மாதங்களில் வடதிருநெல்வேலி, சிவகாசி பகுதியில் பணி செய்த ராக்லாந்து ஐயரவர்களின் உடன் ஊழியர் கனம்.சார்லஸ் எவ்ரி அவர்கள் திடீரென நோயுற்று மரித்துப் போனார்கள். எனவே கனம் ராக்லாந்து அவர்களுக்கு உதவுவதற்காக CMS நிர்வாகத்தின் ஆணையை ஏற்று 1858ம் ஆண்டு சிவகாசி பகுதிக்குச் சென்றார். பலநாட்கள் கிராமங்களிலேயே தங்கி ஊழியம் செய்யும் பழக்கம் இவரிடம் உண்டு. அவருடைய பங்களாவில் அவரை அதிகம் பார்க்க முடியாது.

1859ம் ஆண்டு மார்ச் 25ம் நான் ஒரு குழுவாக செந்தட்டி அய்யனார் கோவில் என்ற கிராமத்திற்கு ஊழியத்திற்கு சென்றார்கள். முதலில் ராக்லாந்து ஐயரை காலரா நோய் தாக்கியது. 'கண்ட பேரன்புரூக் தன்னிடமிருந்த மருந்துகள் மூலம் கனம் ராக்லாந்தையம் மேலும் ஏழு பேரையும் குணப்படுதினார். கடைசியில் காலரா நோய் கனம் பேரன்புரூக்கை தாக்கியது. மருந்துகள் வேலை செய்யவில்லை. இறுதி வேளை வந்தது. அவர் சொன்ன இறுதி வார்த்தைகள் 'நான் விசுவாசித்து இருக்கிறவர் இன்னார் என்று அறிவேன். உலகைப் பிரிந்து போக ஆயத்தமாய் இருக்கிறேன். அதையே நான் விரும்புகிறேன். என் அருமை பிள்ளைகளைப் பற்றி எனக்கு கவலை இல்லை. ஏனென்றால் என்னை இதுவரை வழிநடத்தின் தேவன், அவர்களையும் வழிநடத்துவார்.'

கனம் ராக்லாந்து அவர்கள் சில ஆறுதலான வசனங்களை கனம் பேரன்புரூக்-குக்கு சொல்ல, அமைதியாக நித்தியம் சென்றடைந்தார். 1859 மார்ச் 29. இவரது கல்லறை கனம் எவ்ரி ஐயரின் கல்லறை இரண்டும் பனையடிப்பட்டி (விருதுநகர் மாவட்டம்) கிராமத்தில் உள்ளது. 1818 - 2020, 202 ஆண்டுகள் ஓடிவிட்டன. நமது மண்ணில் புதைக்கப்பட்ட இவரது சரீரம், உயிர்த்தெழுதலின் நாளிலே நம்மைப் பார்த்து மகிழ்வோடு வரவேற்குமா? அல்லது கண்ணீரோடு முகம் திருப்புமா?

**சிந்திப்போம்... செயல்படுவோம்... ஆத்தும ஆதாயம் செய்வோம்....**



GOOD LIFE

match maker

The Happy Journey Begins

எல்லா மதத்தினருக்கும், எல்லா
சமுதாயத்தினருக்கும் வரன் பார்க்கப்படும்

## அணுகவும்

www.goodlifematchmaker.in

+91 90424 09007



கர்த்தர் தமது ஜனத்திற்கு பெலன் கொடுப்பார் - சங் 29:11
EXCEL
Fitness Equipment
Importers & Exporters
Christmas &
New Year
Offer
Offer Valid Upto 05.01.2020
*Conditions Apply
Orbitreck Deluxe
Magnetic Orbitreck
33% Off
Foot Massager
25% Off
Leg Massager
45% Off
Mercury Pro Massager Chair
13% Off
Ecco Plus Treadmill
13% Off
Marvel Plus Treadmill
13% Off
A1500 Treadmill
Muscle Fit
Gym Equipment
Manufacturers & Exporters
MAKE IN INDIA
PROMAXFit
Ab Core
Smith Machine
Hack Squat
Curve Treadmill Commercial
Sissy Squat
Cable Crossover
Peck Rear Delt
Plate Load Chest Press
M : 9488 00 5454
W : www.excelfitindia.com
CHENNAI - TRICHY - DINDIGUL - MADURAI - PASUMALAI - RAMNAD - RAJAPALAYAM - TENKASI - TIRUNELVELI - TUTICORIN - NAGERCOIL
FACTORY : No.4, Reddiyarpatti Road, Near Govt. Engg. College, TIRUNELVELI - 7.